27-2

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருப்பெருந்துறை

ஆவுடையார் கோவில் விளக்கமென்னும்

மாணிக்கவாசகர்

# அம்மானை.

இஃது

ஆவுடையார் கோவில் ம-ா-ா-ஸ்ரீ.

காமாக்ஷியாபிள்ளை அவர்கள் குமாரர்

வேலாயுதம்பிள்ளையவர்களிடமிருந்த

ஏட்டுப்பிரதியை,

மதுரைப் புதுமண்டபம் புத்தகஷாப்

நாகலிங்கம்பிள்ளை

அவர்களால்

சென்னைப் புரசை

நாராயணசாமிப்பிள்ளை

அவர்களது

நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

---

இதன்விலை] 1904. [அணா 4.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பெருந்துறை ஆவுடையார்

விளக்கமென்னும்

# மாணிக்கவாசகர் அம்மானை.



## வெண்பா.

மேருதனு வாகக்கொள் வேதியனும் பாண்டிய
னேவெழக் கின்றி யம்பவே - ஆருந்
துதிக்குஞ் சாமுகத்துச் சுந்தரர் தம்மை
மதிக்குஞ் சரண்கொடுக்க.

## நூல் வரலாறு.

பொன்மகள்வாழ்தென் றுறைசைப் போதன்விளையாட்
நன்மைதருங்கல்வி நவின்றதுவும்பாண்டியன்முன் [டாய்
சீராய்வழக்கெடுத்துச் செப்பியதுந்தென்னவர்க்காய்
மாறுப்பரியேறி மாறும்பரியேசெலுத்தி
நடத்தியதுந்தென்னவர்க்கு நாலாம்பதங்கொடுத்துத்தம்
பிடத்திருத்திக்கொண்ட விதமானயித்தமிழை
அம்மானையாக அறைந்தேனகமகிழ்ந்தோர்
கம்மானேயெங்கள் கணபதியேமுன்னடவாய்
வெண்டாமரையகமாய் வீற்றிருக்குமென்றுயாம்
ண்டாய்குளவாயென் வாக்கிருந்துவுன்னருளால்
வதாத்தன்செய்த விளையாட்டையான்புகழ
மாதாவாய்நின்றேயுன் வாக்கருள்வையுத்தமியே
இலக்கணவிலக்கியமற் றெல்லாமறிந்தவரென்
குலத்துக்குரிய குருவானசற்குணர்தம்
பாதஞ்சிரமேற்றிப் பாடினேனம்மானை

பேதமிருக்கின் இனிதாய்ப்பொருத்தருள்வீர்
பூமகளேயில்லாப் பொருந்துதுறைசைப்பதியில்
மாமதிக்குமூன்று மழைபெய்துநீர்சுரந்து
கண்வாய்ப்பெருகியதங் காலும்வாய்க்கால்வளிபோய்
விண்ணுர்ப்பொனிலுமது மேவுமலரோடைகளும்
ஊருக்கழகாம் உவறில்லாப்பண்ணைகளும்
சேறும்வளைதவளும் செவ்வாளைதுள்ளிவிழும்
கன்னல்க்கதலிகளைக் காய்ந்தொடித்துங்காட்டிலுள்
கொன்பன்றிமான்கோ டொடித்துக்கரிக்கொம்பொடிந்
வானுயருஞ்சோலைதினை மாய்த்துக்கடல்புகுதும் [ அ
பானலத்தைக்கொண்டு பயன்படுமன்னீரதனுல்
செந்நெல்விளைந்து சனங்கள் களிகூர்ந்து
அன்னங்கண்டஞ்சும் அயலார்ந்தபதிவாழும்
ஆதிசைவர்முன்னூர்க் ககமுடையாரெல்லோரும்
நீதிதவறுமல் நியமம்விதிதப்பாமல்
கைலாசநாதர்க் கடவுளவர்க்கினிய
மயிலாஞ்சிவகாமி யம்மனிருவருக்கும்
முன்னுளரசன் முறையாய்க்கணக்காக
என்னுளுமுங்கட் கிதுமானியமாக
கோவில்க்கிதுவுங்கள் குடிமரபுக்கிவ்வளவென்
ருவிபோயாக்கை யழிந்துமழியாதவளர்
பெற்றேயனுபவித்துப் பேரானவாட்கையுற்று
சிற்றம்பலவர்க்குஞ் சிறப்பாகப்பூசைபண்ணி
பொருந்துங்கனமும் புகழுடைவேதியற்கு
திருந்தாரைப்போலேச் சிறப்புங்கைக்கொண்டுவளர்
காராளராவார்கள் கனத்தகுடியாவார்
சீராகஞ்சைபுஞ்சைச் செவ்வையாயுண்டுபண்ணி
அய்யன்மார் தங்கட் கறிவித்துக்கண்டுமுதல்
செய்துவணக்கமதாய்ச் செவ்வாரந்தான்கொடுத்து
சாரமுடனேவல் தனைக்கேட்டமர்ந்தவர்கள்
ஈரமிலாநெஞ்சத்தார்க் கிவ்வூர்புறம்பாக
போடும்நாள்வந்தே புகுதுந்திறமையினுல்
வாகுசேர்திண்புயத்த ராமவர்கள்தான்கூடி
நம்முன்னேர்வைத்திருந்த நற்சாசனவொழுகு

செம்மையாயிங்கிருக்கச் சீருபருந்தென்றுறைசை
ஊரும்நமதுபல னுள்ளதெல்லாந்தானெமது
பாருங்காண்வேதியரே பங்குமக்கேதில்லையென்று
தேவர்வதிக்குஞ் சிறப்புடையமூவேந்தில்
மேலார்க்குஞ்சிங்க வேறுபோலாயினவன்
வைகைநதியும் வசந்தமலையுங்கஞ்சப்
பொய்கையுடையான் புகழ்பாண்டிநாடுடையான்
கோனுதகோலான் குளிர்திங்கள்தன்குலத்தோர்
நானுமேதயாக்கை நயனத்தோனென்றுவந்தோன்
மன்னளரிமர்த்தன பாண்டியன்முன்வாருமென
இன்னம்பலபேசி யியன்றமூரிகைப்பிடித்து
போயினார்காராளர் பொல்லாதகாலவலி
யாயிடையேசென்று ரதன்பின்புவேதியர்கள்
ஒன்றாய்த்திரண்டே யொழுதுபெருசாசனங்கள்
நன்றாபவரவர்கள் நாடுமனையிற்புகுந்து
தேடினார்காணார் திகைத்தாரொருமுகமாய்
நாடினார்நாமென்ன செய்வோமென்நவின்று
ஆதியினின்றின்னாள் வரையிலநுபவித்ததற்கு
ஏதின்னிமித்தியத்தால் விலையாதரவெனவே
வாடுவார்சிந்தை மயங்கித்தவிதவித்து
நீடுவார்சன்னதிமுன் னேர்ந்தவர்களீதுரைப்பார்
சேவுடையாய்கங்கைத் திருமுடியாய்ப்பாதியுமை
ஈவுடையாய்ஞாலத் தெழுகண்டமேயுரையாய்
கையில்மழுமானுடையாய் கனகமயமாய்விளங்கும்
மெய்யிற்பொடியுடையாய் வேதமுடிவானவனே
மேனாரசர்பிரான் விட்டநிலப்பாத்தியத்தை
தானுகக்கொண்டுதளர்ச்சியில்லா வாழ்வடைந்தோம்
அய்யனேயெங்கட் ககமகிழத்தொண்டுசெய்யும்
பொய்யனும்காராளர் போதவுநமித்தெழுந்து
எங்கள்வரும்படியும் மெப்பாத்தியங்களையுந்
தாங்களேகொண்டுமற்றோர் சாசனமுங்கைப்பிடித்து
போனார்வழுதியிடம் புகலேதெமக்கிலையால்
தேனாரிதழிமுடி சேர்த்தாயுன்சன்னதியில்
சொல்விடக்கிருக்கும் தொல்பதியிற்போப்பிழைக்க

செல்லுகிறோமென்றுரைத்துச் சொல்லலுற்றாரம்மானை
பாதிமதியணியும் பரமனவர்க்கிறங்கி
சாதிமறையோனாய்த் தளர்ந்தவயதோனாய்
காதில்திருகுண்டலமும் கழுத்திலுத்திராட்சவடம்
சோதிமயமாகத் தொன்றாலிலங்கிடவே
கையில்தடிபிடித்துக் கண்டோர்பவமகற்றும்
மெய்யிற்பொடியணிந்து வெண்மைத்துகிலணிந்து
கஞ்சமலர்போன்ற கழலிலேபாதுகையும்
அஞ்சிவிருப்பார் குற்றமெலாமகன்றோட
கண்டாரேமெய்யர்துயர்க் காய்வெந்தநாயகரை
கொண்டார்வணக்கமாய்க் கும்பிட்டாரெல்லோரும்
வந்தடியிற்றாழ்ந்து வணங்குமறையோரைச்
சுந்தரஞ்சேர்பெம்மான் சுகமாயிருப்பீர்கள்
என்றஞ்சலிசெய்தே எதிர்நின்றவர்கள்தனை
நன்றாகப்பார்த்து நயமுடனேதுசொல்வார்
இருக்குந்தலமும்விட் டேகுந்தவமுமென்ன
வருத்தமதுவுமது வந்தவகைசொல்லுமென்றார்
சொல்லுமெனக்கேட்ட சூட்சாதிசூட்சவரை
வல்லாரெனவே மதித்தேயெழுந்திருந்து
எங்கள்குறிக்குல தெய்வம்போலின்றுவந்த
புங்கவரேயெங்கள்பதி பொன்னகராந்தென்துறைசை
அப்பதியையெங்கட் கரசர்பிரான்மேனாளில்
செப்பமதாய்க்கொடுக்கச் சேர்ந்தவெங்கள்மூந்நூறு
பங்காளியாகப் பகுந்தேநிலம்பிரித்து
பொங்கமுடன்வாழ்ந்திருந்தோம் புண்ணியரேயின்னாளி
காராளரெங்கள் கனத்தகுடியாயிருந்து [ல்
சிராகநஞ்சைபுஞ்சை செய்துவழக்கமதாய்
மேல்வாரமுள்ள விதமெலாந்தான்கொடுத்து
சால்பாங்கடந்தவர்கள் தயையொன்றும்பாராமல்
எங்களுக்குப்பங்குமில்லை யெப்பாத்தியமுமில்லை
தங்களுடபங்கெனவே சாற்றியதோர்சாசனமும் [ர்கள்
காட்டியெங்கள்பங்கையெல்லாம் கைவசமாய்கொண்டா
கேட்டுமோசாமியின்னங் கேளுமெனவேயுரைப்பார் [ம்
பெலத்தால்செயிக்கவல்லோம் பிரட்டாலுமாற்றுகிலோ

நலத்தால்செயிக்கவென்று இராசன்மகாசபையில்
சாசனமோவில்லாத் தனிவழக்கையாமுரைத்து
ஈசன்கிருபையினல் எவ்விதமேயானலும்
ஆகட்டுமென்றால் அமைச்சனேகாராளன்
சேகரத்தாராமவர்க்கு செப்பிடுவானுகையினல்
எப்பெலமுமில்லாத எங்களுக்கேதெய்வபலம்
தப்பெலமுங்காணு தகன்றேம்பிழைக்கவென்று
செப்பியதோர்வார்த்தை திரிநேத்திரன்கேட்டு
திபத்தியதோருங்களுக்குத் தெய்வச்செயலாலே
எம்மூர்வடக்கிருக்கும் எப்பதிக்குமப்பதியே
செம்மையுளத்தானேர் செப்பவேறெப்பிலது
மனையாள்தனையொருத்தி மைந்தர்தனையிருவர்
அனையாரையங்கிருத்தி யானேதுவந்துவிட்டேன்
வேதங்கள்சாஸ்திரங்கள் விக்கினமிலாமல்வரும் [ம்
சாதகமாமெண்ணெண்கலைகள் சால்பாகவேயுரைப்போ
எத்தொழிலுஞ்செய்வோம் மிருக்காதிடத்திருப்போம்
முத்துவிளையாடல்செய்வோம் செய்யவருமேநமக்கு
பாஷைபதினெட்டும் பயமுடனேயாமுரைப்போம்
ஆசையுடனேர்பொருளுக் காகயினமில்லாமல்
செல்லாவழக்கெடுத்து செப்பினர்தேர்ந்தவர்கள்
எல்லாருமொப்பி இதுசரியாமென்பார்கள்
பகவான்செயலாலும் பாக்கியத்திறத்தாலும்
சகாவாயிருப்பேனின் றன்பதிக்கேவாருமென்னக்
கூறினீர்யாங்கள் வருவோங்குரும்பர்வந்து [க்க
வீறுசெய்தாலென்னசெய்வோம் வேதியரேயென்றுரை
கேட்டானர்சொல்வாரே கீர்த்தியுள்ளவெங்குறும்பர்
நாட்டாவழக்கதனை நாட்டுவாரானதினல்
பாடோயலிதுவெகு பாடுபடவேணுமிதுக்
கிடொப்பவென்கொடுப்பீ ரென்றார்பெரியவரும்
வெய்யராங்காராளர் விரடக்கிக்காணியெங்கள்
கைவசமேசெய்தால் கணக்கில்லாப்பொன்கொடுத்து
பாதம்பணிவோம் பலகாலமுத்துதிப்போம்
நாதரேயென்றே நலமாயுரைத்தார்கள்
என்னகாண்வேதியரே யேற்றுகிருரெந்தனையும்

சொன்னம்பொலிக்காணி தோதாய்நலமாக
உங்களுக்கெல்லாங்கொடுத்தே யொன்னலரையொப்பார்
தங்கப்பணமெமக்குத் தந்தாலதுவேண்டேனே [கும்
என்றுரைக்கவேதியர்கள் எல்லோருமென்றெழுந்து
நன்றாயுமக்குமனம் நாடும்பொருளதனை
சொல்லுமையாவென்றே துதித்தார் தனைநோக்கி
எல்லார்மதிகுடி யேதுரைப்பாரப்போது
அந்தமில்முன்னூற் றகத்தோராகவிருக்கின்றீரே
எந்தனுக்குமோரகமா யீன்றளிப்பீரென்றதனால்
உரைத்தவிதமதுகேட் டோதுவார்வேதியர்கள் [ம்
விரைச்செழுந்தார்மார்பரெம் விண்ணப்பங்கேட்டருளு
பெருந்திரவியங்கொடுப்போம் பெண்கொடோம்பூமிதந
வரும்பெரியநாயகரே மறந்துவிடும்பூமியென்றார் [ரோம்
என்றுரைத்தவேதியர்பால் இனியவசனமதாய்
மன்றுள்நடம்புரியும் மகாதேவரேதுரைப்பார்
காராளர்கைவசமாங் காணிதனைத்திருப்பி
தாராளமாகக் கொடுக்கும்சமர்த்திருக்க
காணிகொண்டுமாளுக் கவலையதனைவிண்டு
பேணிப்பிழைப்பதற்குப் புத்திபெரிதில்லையால்
மலையளவுபொன்கொடுப்போன் மற்றதிலேவெண்கடுகு
தலையளவுகேட்பவர்க்குத் தாளுத்தகமையர்போல் [ம்
ஆச்சுதுநாமுங்களுக்குஅடுத்தடுத்துச்சொன்னதெல்லா
போச்சுதுங்கள்காலப் பிசகோமுன்பூர்வீகம்
காராளர்முன்னோர்கள் கனதிரவியங்கொடுத்து
பாரம்பரையாகப் பாவித்துவந்தாரோ
வேதியர்தஞ்சொந்தமோ வேறொருவர்பாக்கியமோ
ஆதிதெரியாதவிதை யாம்பேசக்கூடாது
என்றேயிருந்தார் இருமறையோர்தான்கூடி
நன்றாகப்பேசுகின்றார் நாமெல்லாமொன்றாக
காணியிழந்தே கவலையுடனேகுகையில்
வேணியரனருளால் வெளிப்பட்டாரிம்மறையோர்
நம்மமனக்குறிப்பு நாடியவர்தானறிந்து
செம்மையுடன்சொல்லும் திறமுடையோரானதினால்

வழுதியிடஞ்சென்றே வழக்காடித்திதன் துறைசை
முழுதுங்கொடுப்பார்நம் முன்னோர்தவபலத்தால்
என்றிவர்கள்பேசி யிவர்க்குநம்மோடொத்தபங்கு
நன்றாய்க்கொடுத்தால் நயமாகுமென்றுரைத்து
வந்தேயிறைஞ்சிநின்று மாமறையோரெல்லோரும்
சந்தேகமில்லைமுன்னூத் தொன்றிலொன்றுதந்துவிட
என்றிவர்கள்சாசனமொன் றியல்பாய்வரைந்தெழுதி
அன்றுவர்தயோகர்கையில் அன்புடனேதான்கொடுத்து
சாசனத்தாலுள்ள தனிநிலத்துக்கேயொழுகும்
மாதவத்தோர்பார்க்க வகையுடனேயென்றெழுதிக்
கொடுத்தாருமறையோர் கொண்டார்சகம்நிறைவோர்
எடுப்பாரதைப்படிப்பார் ஏற்பாரதைப்பிடிப்பார்
பூமிகொடுத்த புகழுடையவேதியரைச்
சாமியனுழைத்தே தயவாகயிதுரைப்பார்
குரும்பர்சென்றமாநலஞ்சேர்கொற்றவனார்தம்மிடத்தில்
அரும்பெரியமாமறையீர் யாம்போகவேணுமெழில்
தென்னவரைக்கண்டே திரும்புநாளுள்ளமட்டும்
நன்னயமாய்நற்சிலவை நாடித்துமொத்தமதாய்
போன்னெடுத்துவாருமெனப் புங்கவனார்தாமுறைக்க
மன்னுமறையோர்கள் வந்தோரிடத்திருந்து
பங்குக்குத்தக்கப் பணமெடுத்தேவேதியர்கள்
இங்களணிவோர்முன் சென்றுமொருமுகமாய்
நன்றிசெய்வார்போல நடந்தாரிவயோகி
பழுதுபடாதெப்பொருளும் பண்பாகவர்தடையும்
எதாலுரைத்தோர் மெனக்கேழ்ப்பீராமாகில்
சூதாயோர்மாதவனும் தொட்டெறிப்போனெனன்றெழுந்
வந்தாமினைத்துரத்தி மாமலைகளுள்ளதெல்லாம் [து
பிரதவேயோடிப் புகுந்தேனோர்பூச்செடியில்
காணுதெளித்துக் கவலையுறுங்காலையிலே
நாணுமலர்விடையான் நங்கையனுய்மாதவனைக்
கண்டேதுலைத்தான் கனசகுனமாகுமிதைக்
கொண்டேபிழைத்தேனெனக் கூறியேயோகியரும்
அய்யமோஎன்றே யகமகிழச்சேதிசொல்லி
சையோகமாகவழித் தாண்டிநடக்கலுற்றார்

நடந்தோர்பாதம்நோக நாதாத்தவேதாந்தர்
தொடர்ந்தார்மறையவரும் சுற்றிலுமேனத்திவந்து
முன்னுளனுபோகம் முற்றிலுமேயெங்களிடம்
தன்னாலறிந்ததினால் சாற்றலாம்நேத்தியதாய்
அய்யரேயென்றுரைக்க அந்தணரைத்தான்பார்த்து
மெய்யர்சகலசி வய்யர்சிறுநகைகொண்
டெல்லாமறிவோம்நாம் எவ்வயலுந்தாமறிவோம்
சொல்லாதீர்வேண்டாம் மற்றாயவழக்கதனை
செப்பும்போதென்றனுட சேதியெல்லாங்கண்டறிவீர்
ஒப்பிலாமாமறையில் உங்கள்வழக்கேசெயிக்கும்
என்றரனார்சொல்லி நடந்தேகயிருபாதம்
கன்றுமேயென்னாக் கதிரோன்கடலாழ்ந்தான்
கங்காதரனுருவு காட்டுதன்மையைப்போலப்
பொங்குசெவ்வானந்தோன்ற புங்கவனார்தங்குதல
மாசகன்றுவின்னொளிசெய் வண்மையதுவர்பெனவே
ஈசனனிவேணிமதியன் றெழுந்தவ்விராவதனில்
சீர்பொருந்துந்தென்திருப்புத் தூரிற்சிறப்புடனே
பேர்பொருந்துமோர் வேதியர்வீட்டிலின்னடிசில்
வர்க்கவகையோடு மானெய்தயிருடனே
தக்கபடியருந்தித் தானிருந்தராகவையன்
கொடியார்தமக்கே கொடியவராந்தன்னியல்கொள்
அடியார்தமக்கே யடியவராமாதலினால்
வேதியர்பாலன்பு விளையுமனமுடைய
ஆதிபகவா னரசன்கனவினிற்போய்
அரிமரத்தன்பாண்டியனை யன்றெழுப்பினன்றெழிலாம்
கரிமாப்பலவளத்தோய் கலையோன்குலம்வளத்தோய்
மானிலத்திநன்மைதுன்மை மன்னவரைச்சாருமிள
வேனிற்குறியநிகர் வேந்தனேயானதினால்
தென்றுறைசையென்றோர் திருப்பதியாமொன்றுளது
நன்குமதிக்கவல்லார் ஞானவழிதப்பாதார்
அந்தணராஞ்சில ரவர்கள்தனைக்காராளர்
தொந்தரையுஞ்செய்து துடர்ந்திலப்பாத்தியத்தை
எண்ணாங்கைக்கொண்டுவழக் கிட்டுவந்தாருன்னிடமாய்
நல்லாவிசாரியென்றே நாயகரும்போய்மறைந்தார்

மன்னன்விழித்து மகாயோகிசொன்னதெல்லாம்
இன்னதெனவறிய எண்ணினன்தென்னவனும்
மதிமந்திரிமாரையெல்லாம் வாருமெனவேயழைத்து
விதியின்வலிநீக்குகின்ற வேதியர்போலென்கனவில்
வந்தேதுரைசைப் பதியின்மறையவர்க்குஞ்
சிந்தைகலங்கித் தியங்குங்குரும்பருக்கும்
தொததங்களாகத் தொடர்ந்தநிலத்தின்வழக்காய்
உந்தனிடம்வாரூர் உனதுமனப்பூரணமாய்
ஞாயம்பகர்வாய் நாதிபனேயென்றவரும்
மாயமாய்ப்போனரே அம்மந்திரிமாரேயாமும்
பெரியோரவர்தான் பிதற்றியதோர்வார்த்தையதை
சரியாக்கிபின்னெழும்பத் தக்கதென்முன்முகப்பில்
தென்னவனும்வீற்றிருந்தான் றென்திருப்புத்தூரில்வந்த
முன்னவனேதஞ்சமென மொய்த்துவந்தவேதியரும்
திடுக்கென்றெழுந்தார் தினகரனுந்தானெழுந்தார்
கடுக்கென்றெழில்களத்து காவலனுந்தானெழுந்தார்
வேதியரும்வேதியரை வேண்டியாட்கொண்டவரும்
சாதிமுறைப்படியே சந்திக்கடன்முடித்து
வந்தார்களன்றே மகாயோகிதன்னுடனே
முந்தவருந்தமனை தன்னில்முயன்றருந்தி
சீக்கிரமாய்த்தானெழுந்து சென்றேவழிகடந்து
பாக்கியமிருந்தென்மதுரைப் பால்வந்தடைந்தார்கள்
எப்புவிக்குமேலாம் இனியமதுரைவளத்தை
ஒப்பிட்டுரைக்கவென்று லொவ்வாதிருப்பதையான்
சொல்வாறெண்ணில்மதி தோன்றுச்சிறுகுளவி
நல்லமணல்வீடுகட்டி நாளுமகிழ்வதொப்ப
மங்காவனமுமலர் பொய்கைகளுமேடைகளும்
தேங்குங்கதலிகளுஞ் செங்கரும்புஞ்சங்கையிலா
கமுகுநிறையுங் கழனிகளிலோதாழை
குமுகுமெனவெழுப்பும் கோலவரால்துள்ளிவிழும்
மாவும்பலாவும் வகைவகையாய்ப்பழுத்துதிரும்
காவுங்கயமும் கழனிகளிலேபாயும்
மதுவும்மலரும் மணியும்வகைவகையாய்
மெதுவுமுதவு மிருந்தெருவிலோடந்து

கெங்கைகனக்கஞ்ச கெங்கைதனிற்படிந்து
மங்கையர்க்கெல்லாமரசர் மங்கைமகிழ்நாதன்
சுந்தரரைப்போற்றி துதித்தேமனக்கவலே
சிந்தைமகிழ்ந்தவர்கள் தேறிநடந்துசென்று
வழுதியிருக்கும் மணிமுகப்பூவாசலிலே
பழுதிலாவேதியரோர் பக்கமேவீற்றிருந்தார்
புங்கவனுந்தன்கனவில் பட்டபடிபார்வழக்கோர்
இங்கேவரவிலேயென் றிருந்தோர்தனைப்பார்த்து
திருப்பெருந்துறையிருந்து செவ்வையுடனிங்குவந்து
இருப்பவரார்வாரீர் எனவழையுமென்றுரைக்க
வாவென்றசத்தம் மகாதேவர்தான்கேட்டு
ஆவேதியாரே யரசனிடம்வாருமென்று
கேட்டினியமாமறையோர் கிடுகிடெனவேபயந்து
ஓட்டம்பிடிப்பதற்கே யுற்றவழிபார்க்கிறதும்
கைகால்நடுங்குவதுங் களேபரந்தள்ளாடுவதும்
மெய்கால்மொழிகுளறி வேர்த்திடுவார்வேதியர்காள்
முன்னேகால்செல்லாமல் முன்கால்பின்வாங்கிடவே
தன்னேரிலாதார் தயங்குகின்றவேதியரை
பார்த்துமனக்கவலே தன்னையறிந்தகற்றி
சேர்த்தொன்றுயவந்து செங்கோலானேர்குருகிடவே
பார்த்தரசன்கண்டு பரிவாசனம்போட்டு
நிர்த்தர்களைவீற்றிருக்க செப்பவுங்காராளர்வந்து
எங்கள்பெருமானே யிவ்வுலகங்காப்பானே
மங்கைக்கோர்பங்களித்த வள்ளல்கிருபையினால்
காணிபெருந்துறையாய்க் கைக்கொண்டிதுவரைக்கும்
பேணியேவாழ்ந்தோமே பெரியவராற்பெற்றிருந்த
சாசனத்தாலுள்ளபடி தானேயனுபவித்து
வாசமதாய்வாழ்ந் துண்டிருந்தநிலமத்தனையும்
அய்யமார்தங்கள் அருதியுளகாணியெனச்
செய்யுந்துருவழக்கை தீருந்தென்றுட்டதிபா
எனறுகாராளர் இயம்பவேதென்னவனும்
நன்றியுள்ளவேதியரேநவில்வீர்களிவ்வழக்கை
கண்டுண்மையெல்லாம் கனசபையோரும்மதிய
விண்டுரைப்போஞ்சொல்லிடுவீர்வேதியரேஎன்றழகாம்

மீனக்கொடியோன் விளம்பஅய்யரேதுரைப்பார்
மானமுடையீரும் வழக்கையறிவிப்பீரென
வேதியர்சொன்னவுடன் விரைவாயொருமறையோர்
ஓதுவானல்வேதத் தொன்றுவருமெந்தனுக்கு
சாஸ்த்திரமிரண்டுவரும் சவராதேசபகருமம்
நேத்தியுடனேநமக்கு நெடுநாள்பழக்கமுண்டு
ஆனதாலத்தை யறியவலியுள்ளோரை
மீனவனேயென்றேடே விட்டெறியுமென்றுரைக்க
மாரனதுகேட்டு மற்றோர்வருவீரெனப்புகல
வீறுடையவேதியரில் வேறொருவர்வந்துநின்று
செப்புநவ்வியாகரணம் தெரியுமதுபோதியான்
ஒப்பத்தமிழும் உரைப்போமிதுதவிர
கூடுவிட்டுக்கூடு பாயும்குறிப்பறிவோம்
நாட்டில்லாநாடுசெல்ல நற்குழிகையுந்தெரிவோம்
பாரிலெமக்குநிகர் பார்த்தறியமானவரை
சீருபருமண்ணோரீ செப்புவீரென்றுரைக்க
முன்றவந்தவேதியரின் மூத்தோரிவரெனவே
அன்புடையவேந்தன் யவரையகலென்றுரைத்து
வகையாகத்தோற்றால் வழக்கெடுத்துப்பேசவல்ல
தகைசான்றோர்வந்தென்முன சாற்றுமெனவழக்கை
என்றானரசர்பிரான் எழுந்தேயொருமறையோன்
குன்றார்புயத்தானின் கோல்கோணுத்தன்மையினால்
பாரதசாஸ்த்திரமும்வரும் பண்பானதர்க்கமெல்லாம்
கரையறவேகாண்பேன் கனதையுயர்சோதிடத்தில்
வல்லவனுமாவேன் மயனூலுரைபுகல்வேன்
தொல்புவியிலுள்ளோரால் சோதித்தேபாருமென
நல்லதுகாண்வேதியரே யென்றேநராதிபனும்
வல்லவரும்போல அறிந்திலனுமாகையினால்
இவ்வளவுவேதியரில் எசமானனென்றுளரால்
செவ்வையாய்ச்சொல்லுமென செப்பினான்மீனவனும்
வேதியர்கள்கூடி வெகுவாய்மனங்கலங்கி
ஆதிபெரியோர் அவராமெனவுரைக்க
வேந்தாதுகேட்டு மேலானதத்துவத்தை
ஆய்ந்தீர்வழக்கை யரையுமென்றான்தென்னவனும்

தேவர்பிரான்கேட்டு திடீரென்றெழுந்திருந்து
மார்வளர்செம்மார்பா அறைவேனினி நாக
ராசராசர்க்குமன்னன் நலமாயெமக்களிக்க
வாசமுள்ளவோறுமுறி வந்திருக்குதீங்குகனை
பார்த்தால்தெரியுமிது பாருமின்னே நாறுசுக்காய்
சேர்த்துவிருத்தல்செய்து யிருக்குமந்தச்சாசனத்தை
கம்புக்குடங்கையிலே காந்தேவைத்தேகினர்போல்
இன்பமொன்றில்லா முறிகொடுத்தாரிவ்வரும்
வாங்கியேதென்னவனும் மாமறையோரைப்பார்த்து
ஒங்குமிந்தச்சாசனத்தால் ஒன்றுந்தெரியவில்லை
ஆதலால்வேதியரே யாமறிந்துசொல்வதற்கு
போதவாஞ்சாட்சியெங்கள் புந்தியுரத்தோணவில்லை
என்றிவனுங்கட் கியல்பாணகாணியதில்
ஒன்றுமடையாளம் ஓதுவீராமாகில்
சோதித்துப்பார்த்தேயாம் சொல்லுவோம்ஞாயமதை
வேதியரேசொல்லுமென வேந்தனுரைத்ததின்பின்
இருபிறப்பாளரானோ டிங்கிதமாகக்கூடி
மருவார்ந்தவேம்பலங்கல் மன்னனுரைத்தபடி
ஒன்றுமெங்களாலறிவோம் உரைப்பீரடிகளென
குன்றைவில்லிகூலாக் கோமானெதிர்புகல்வார்
எங்கள்தனக்குரிய காணியதுமெவ்விடத்தில்
துங்கமுடிமன்னு துலங்கிடுமண்கொட்டெடுத்து
வெட்டப்புனல்காணும் மிதுவேயடையாளம்
மட்டாரும்நிம்பமலர் மாலையாவென்றுரைக்க
கேட்டுமறையோர் கிலேசமிகவேபொருந்தி
விட்டும்பொருள்மண்கொண் டெமக்கெல்லாங்கேடாக
மேனளிதுவரைக்கும் இல்லாவழக்கமதை
தானகச்சொன்னன் தயையுறுவேந்தன்சபையில்
மாசகலான்றன்னை வருபெரியோனென்றதனல்
பேசவாயில்லாமல் போச்சுதேபேரளிக்கும்
அந்தரரேயென்பார் தொழுவாரெழுந்திருப்பார்
அந்தரமதானேமென்று அழுவார்தயங்கிடுவார்
வேதியர்களிந்தவிதம் யுரைக்கவேகுருப்பர்
நீதியாலோகமெல்லாம் நேசித்துறுதிகொளும்

மன்னர்க்குமன்னு மகுடந்தரிப்பவனே
விண்ணமிலாதான்வந்த வேதியர்தஞ்சொற்படிக்கி
இருக்குமேயானல் இயல்பானகாணியெங்கள்
ஒருக்காலும்வேண்டாமென் ருேதினரேகுரும்பர்
அவ்வார்த்தைகேட்டு அரசன்மிகமகிழ்ந்து
ஒவ்வாவழக்காய்வந்து உற்ருேர்தமைப்பார்த்து
பெருந்துறைக்கிராமே பிறப்படுவோமின்றேநீர்
வருந்தலொளித்தல் மறையவர்களேகுமென
அப்போதகமகிழ்ந்தே யான்சிவயோகியரும்
மெய்ப்பாகவாருமென வேதியர்பின்னேதுரைப்பார்
அங்குலம்நாலூறு யழுத்திவெட்டிநாலுமதில்
சங்கையறவேபருவி தான்காணமாட்டாது [னும்
பொங்கமுடன்கொட்டெடுத்துப் போகுமுன்னேநீகா
மங்கதெனச்சொன்னீர் அதுகேட்டரசர்பிரான்
வந்துசோதித்தே வகையுடனேகாணியெல்லாம்
சிந்தைமகிழ்குரும்பர் சீர்மிகவேயொப்பிவிக்க
பார்த்துநாம்வெட்டுநல்ல பாவலரைக்கண்டொழியும்
தூர்த்தனுமென்றுமலர் சொந்தப்பொருளுமென
ஆக்கங்குலைந்து அகங்குலைந்துமேலான
வீக்கங்குலைந்து மறுவேந்தருடபூமியிற்போய்
பிச்சையெடுத்துண்ண புகுர்துமேயெல்லவரும்
வாருங்காண்வேதியரும் மனக்கவலைதன்னைவிட்டு
பாருங்காணென்திராணி பரமனருளாலே
குரும்பரையையோட்டிவிட்டுகோலமிகுகாணியெல்லாம்
விரும்பியுமக்களிப்பேன் வேதியரேயென்றவர்பின
வாருமெனவந்தார் மறையோரும்வேதியரும்
சிருயரும்தென்துறைசை சேரவேவம்மானே
இவ்வாறிவர்வரவே யேத்தமுள்ளகாராளர்
செவ்வையாய்க்கூடி இரண்டவர்கள்பேசலுற்ருர்
அந்தணர்கள்சிக்காய் அகப்பட்டவர்களவை
இந்தவிதம்வந்த கெமத்திஷ்டமென்பார்கள்
வேருேர்வழக்கெடுத்தால் வெகுநாளலைந்திடுவோம்
மாருக்கிழவன் வழக்கின்ருேடேதொலைத்தான்
குடிக்காணிநம்மக் குறியத்துவுடனே

அடிக்காணிவந்த ததிஷ்டமெனவென்பார்கள்
பாண்டியராசன் பகர்காணியத்தனையும்
வேண்டியளிப்பார் நாமேவுவோம்வென்பார்கள்
ஊர்தனக்குச்சென்று உயர்காணியத்தனையும்
ஆற்குஞ்சரிபங்காய் அளந்துகொள்வோமென்பார்கள்
இந்தவிதம்குரும்பர் எல்லாருந்தான்பேசி
அந்தமுளதுறைசை யன்றடைந்தாரம்மானை
வேதியர்தங்களுடன் வெங்குரும்பரையுமகா
நீதியதுகோனு நெடியதுறைசைக்கனுப்பி
புரையிலாதின்னமைச்சன் தன்னைப்புடையழைத்து
தேவர்கட்கும்யாவர்கட்கும் தேவனுரைத்தபடி
கோலகன்றமேலாங் குளிர்பொழிலார்தென்றுறைசை
சென்றவ்வழக்கைதனைத் தீர்த்துவரவேணுமது
இன்றேபயணமதற் கேற்கெனவேசெய்வீரென
மந்திரிகளெல்லாம் மகபதின்சொற்படிக்குச்
சுந்தரமால்யானைபரி துங்கமுளபல்லாக்கு
காலாள்கள்போகியுடன் கணக்கில்லா ஆயுதங்கள்
மேலானபேரிகைகள் எல்லாம்விரைவாக
சேர்த்தினியமந்திரிமார் சென்றுரைக்கவன்றாசன்
மாத்துயரும்வெள்ளி அம்பலத்திலாடுகின்ற
திங்களணிவோன்பலத்தை சேவித்தினிதாகும்
மங்களதினத்தில் மணிச்சிவிகைமீதேறி
கட்டியங்கூறக் கவரியிருபாலவீச
பட்டவர்த்தனர்களிரு பக்கம்ஆசிர்வதிக்க
மகுடமுடிமன்னவர்கள் வந்திறைஞ்சிமுன்புவர
சுகணமுளநற்கலைஞர் சூழவேகன்னியர்கள்
ஆடப்பல்லியவோசை யஷ்டதிசையுமதிர்ந்து
நீடவேமீனக்கொடி நேரிலிலங்கிடவே
தென்னன்வரவைக்காண திங்கள்வெளிவந்தாப்போல்
மின்னுதாளக்குடைகள் அவ்வேந்தனெதிர்பிடிக்க
மானக்கரைவிட்டெழுந்து மாணிலமெல்லாங்கடந்து
தேனுலவும்பூம்பொழில்சேர் தென்துறைசைவந்தடைந்
வந்தடைந்தமீனவனை வன்குரும்பர்சென்றுகண்டு[தார்
அந்தமுடனின்றே யடிவணங்கியேதுசொல்வார்

மன்னர்க்குமன்ன மகுடமுடிவேந்தே
கன்னனெனவாழுங் கனதையுள்மன்னனிவன்
திருவாக்குத்தப்பாமல் சீக்கிரமாயாங்கள்வந்து
இருக்கின்றோம்வேதியர்கள் இன்னம்வரவில்லையையா
என்றேகுரும்பர் இயல்பாயுரைப்பளவில்
குன்றுமறையவரும் கோமானைவந்துகண்டார்
அரசனிரண்டுவகை யார்தங்களைப்பார்த்து
விரைவாய்வழக்கை விளம்புவீரென்றுரைக்க
காராளர்சொல்வார்கள் கதையுறுமினவெப்பக்
தாராய்மறையோர்முன் சாற்றியவாக்குப்படிக்கு
சோதித்தாப்போலுமெனச் சொல்லவேமாமறையோர்
நீதிட்துதப்பா நிருபனெதிர்சென்றுரைப்பார்
தென்னவரேயாங்களென்று செப்பியவாக்குப்படிக்கு
நன்னயமாய்ச்சோதனையை நான்காட்டுவேனெனவே
பாதிமதிசூடும் பகவனுமேகங்கைதனை
மேதினிக்கீழாறாக மெல்லெனவாவென்றுரைத்து
குறும்பரேபாருமெனக் குடங்கையில்மண்கொட்டெடு
மறுவிபக்தவேதியர் வெட்டுந்தருணமதில் [த்து
கங்கைபெழுந்திடவே காராளரெல்லோருஞ்
சங்கையறவேறோ ரிடமதனைத்தான்காட்டி
வெட்டுவீரென்ன விமலனுமண்கொட்டெடுத்து
கட்டுசடையாடவெட்டக் கண்டார்பேராறாக
இதுவுஞ்சரியல்லக்காண் இன்னமுமோரிடத்தில்
பதியவேவெட்டியதில் பாயுஞ்சலமெழுந்தால
எங்கள்வழக்கதனை விட்டின்றேயெல்லோரும்
கொங்கன்திசைபோவோம் எனக்கூறவேமாமதியும்
பொங்கரவம்பூநூலும் புலிகரித்தோலுமணிந்து
சங்கரனார்துங்கமுடித் தார்வேந்தனைநோக்கி
செப்புவாரிக்குரும்பர் காட்டுநிலத்தெவ்விடத்தும்
ஒப்பிலாவிண்ணீர் ஒழுகவேயாறாகக்
காட்டுவிடங்காட்டா விடமெல்லாங்கங்கைதனை
நீட்டச்சடையணிந்த நேயமுள்ளவெம்பெருமான்
வெட்டுவார்தொண்டர்பிணி வெட்டுவார்வெட்டிடவே
யட்டில்லாவென்ன மதுவாயெழுந்திடவே

பார்த்துக்காராளர் பதறிமொழிகுளறி
வேர்த்துத்தனித்தனியே மேதினியிலேவீழ்ந்து
அழுவாரெழுவாரும் அய்யோகோவென்பாரும்
பொழுவாய்க்கிழவன் புரட்டெனவேசொல்வாரும்
தெய்வம்பொதுவெனவே செப்புதேநல்வேதம்
அய்யோ அத்தெய்வம் அகன்றதோவென்பாரும்
பிசகுவழக்கெடுத்தாற் பின்னாற்கெடுதியுமேல்
விசந்துநேராம்வகையும் எம்மளவிற்கண்டறிந்தோம்
என்றேகுரும்பர் இயல்பாகத்தான்கூடி
சென்றேயரசனையும் தெண்டனிட்டேநின்றளவில்
நன்றாகவெக்குரும்பர் நாடாதீரென்றெனவே
குன்றுப்புயத்தரசன் கோபமாய்த்தானுரைத்தான்
கேட்டுக்குரும்பர் இலேசமிகவேயடைந்து
வாட்டமுற்றுச்செல்லா வடமேற்றிசைபோனார்
குரும்பரகன்றவுடன் கொற்றவனும்நற்றவரை
அறஞ்சார்பரம்பொருளோ ஆரோவென்றய்யமுற்று
கோராதான்சிந்தை தெரியாதான்மாலயனும்
ஓராதான்றன்னை யுவந்துபணிந்திதுரைப்பான்
அய்யாபெரியவரே யாதிகைலாசநிகர்
துய்யோரேயிவ்வழக்கை தொட்டெடுத்துவந்தவரே
மாமதுரைக்கேக வரங்கொடுக்கவேண்டுமெனக்
காமன்றனையெரித்த கைலாசவாசவனும்
செப்புவாரப்பா செகத்தப்பாவுத்தனுக்கு
ஒப்பினையும்வாரா திருந்தேயரசாண்டு
பூவுலகுக்கெல்லாம் புரந்தானப்புண்ணியனாய்
சேவுடையார்பாதம் சென்றடைவாயென்றுரைத்தார்
என்றாருர்சொல்ல யிறைஞ்சியேபாண்டியனும்
நன்றுமெனமகிழ்ந்தே நன்மதுரைக்கேகியபின்
மறையோர்களெல்லாம் வந்தொருங்கேதெண்டனிட்டு
பிறைசேர்சடையானைப் புகழ்ந்தேபின்பேசலுற்றார்
வேதியரேயெங்கள் குலவித்தகரேமேலான
போதகரேஞானமெல்லாம் போதிக்கவல்லவரே
வேதமறியோம்நாம் மெய்ப்பொருளுமேயறியோம்
நீதிநலமறியாச் சிறியோர்கள்செய்தபிழை

கருத்திடாதுள்ளிங்கே கார்க்கக்கடமையதால்
பொருத்துரட்சிப்பீர் புகழ்கின்றவேதியரே
அன்னைபிதாதங்கள் அருங்குளவிசெய்கபிழை
தன்னைப்பொருத்துநிமைத் தங்குமதுபோல
எங்களையுங்காத்தின் றிருநிலமீன் றீய்ந்ததுபோல்
பங்கமிலாவெங்களுடப் பாலகருக்கிப்போது
ஓதிவைக்கவேணுமென்று வந்தேயடிபணிந்து
வேதியர்கள்கேட்க விருப்பமுற்றேயோகியரும்
ஆமென்றதற்கிசைய ஆதிசைவரெல்லோருய
தாமமெனக்கொருநாள் சாப்பிடுமெனென்றுசில
பேசிமறையோர் பிரமன்மனைவியவள்
வாசிக்கும்போது அழகாமென்றுரைத்திடவே
பள்ளிக்கூடங்கட்டி பரிவானபிள்ளைகளை
வெள்ளிக்கிழமையிலே மின்பேஷராசியிலே
ஓதிவைக்கும்பிள்ளைகட்கு ஓதிவிப்பாரெக்கலையும்
தீதகற்றுவேதபிரான் சிந்தைமகிழ்வாக
பிள்ளைகளைமுன்வனுப்பி பின்னுகனுமமமறையோர்
உள்ளவர்கள்வீட்டில் ஒழுங்காகவேபுசித்து
வரண்டுமுறையாய்ச்சினனுள் மறையோர்சிறுவருக்கு
பரமன்வடமொளியும் பண்பானதென்மொழியும
தான்பயிற்றியந்தணர்கள் தன்மனையிலேயிருக்க
மான்மழுவுநீக்கிவந்த மறையோரொருதினத்தில்
பள்ளிக்கூடத்திற்கும் பாலர்களைத்தாமழைத்து
விள்ளுமலர்கொய்து விளையாடிவருவோமென்றே
நக்கண்ணர்சொல்ல நலமாஞ்சிறியவரும்
அக்கணமேசென்று அரனருப்பாலகரும்
கண்டார்குருந்தவனக் காமருவுசோலையெல்லாம்
வண்டார்வஞ்செய்யும் மலரின்வார்தேனொழுகும்
மாவிற்குயில்கூவும் மணிக்கிளிகளுங்குலவும
தாவிக்குறங்குமந்த தாமனைபழம்பறிக்கும்
மயிலும்புறவும் மகாவெழில்சேர்பட்சிகளும்
ஒயிலாயிருந்துலவும் கப்பலையுமேபருத்த
கரிபரிமானேனங் காட்டெருமையாயபலவும்
பரிவாகச்சேர்ந்து பரவுகின்றகம்பலையும்

கொல்புலியினுற்புங் கொத்சிதாடிக்கண்டெழும்பி
செல்லுகின்றவார்ப்புஞ் சிறந்திடுமெக்காவதினுல்
ஆதியாய்மூலத் தகமாய்நின்றந்தபறஞ்
சோதியாய்வந்தோன் றுடர்ந்துவருமபிள்ளைகளைப்
பந்தடிக்கச்சொல்லி விளைப்பந்தையெல்லாங்கொண்டரு
வந்தெடுப்பான்போல வடித்தவொருபந்துதன்னை [க்கு
எத்துவார்கையால் எடுப்பாரெதிர்செலுத்தி
சுத்துவார்பந்தைநற்றித் தொட்டெடுக்கமேலெழும்பி
பாய்வார்கீழ்வந்து பதுங்குவார்கைகால்கள்
ஓய்வார்சிறிது மொழியா விளையாட்டாய்
பந்தடித்துமந்தமிலார் பலவிளையாடல்கள்செய்து
கந்தரமவாவுகின்ற கனத்தகுருந்தடியில்
மேவினுர்கா ணுர் வெருவினுர்பாலகர்கள்
தாவினுராவியன்னச் சங்கரனைக்காணுமல்
விந்தையதாக விளையாடக்கூட்டிவந்த
தந்தைதனக்கொப்பார் தயையுடையீர்வாருமென்பார்
மேலானவித்தையெல்லாம் வேண்டியெமக்கழித்து
நாலாம்பதங்கொடுக்கும் நாயகரேவாருமென்பார்
புத்திசற்றில்லாத புலவரிவரெங்களுக்கு
சித்தியொடுபுத்திதரும் தேவனேவாருமென
என்றிவர்கள்தேடி இளைத்தேமுகம்வாடி
சென்றவர்கள்தந்தையற்கே செப்பினுரப்போது
ஆதிசைவரெல்லாம் அதுகோடரும்பொருளாம்
சோதியாரெங்கொளித்தார்சொல்லுமெனப்பாலர்சொல்
மாவளங்களுற்ற வூனத்திலேயோகியரும் [வார்
கோலகன்றுமேலாம் குளிராக்குருந்தடியில்
மறைந்தார்பரமர் எம்மனதினுற்கவலைபுற்று
விரைந்தெழுந்துதேடியிங்கேமேவினேமென்றுரைத்தா
பாலர்களிந்தவிதம் பகரமறையோர்கள் [ர்
சீலமுடன்தேடித் திகைத்தேதுசொல்லலுற்றுர்
அன்னைபிதாவென்னவிக ரய்யனேயாண்டகையே
உன்னையல்லாலோர் துணை யுண்டோவெனவழுவார்
தனியாமுதலோர் தானவர்க்குத்தானவனே
மனிதனெனவெண்ணி மதிப்பிலாதேயிருந்தோம்

என்றுமறையோர் இருந்துவிசாரமிட்டு
ஏன்றுவுமக்கெனவே நாடிமனைவந்தடைந்தார்
இல்விலைவந்தே யிருக்குமறையோர்கள்
அல்லார்களத்தார் அருஞ்சரணங்காணாமல்
இன்றுமுகலன்னம் பொசியோமெமையாளும்
தன்னேரிலானேயுன் தஞ்சமெனவேயிரவில்
துயிலுமறையோர்க்குத் தோன்றவேநற்கனவில்
மயிலாளுமையுடனே வால்விடையின்மீதேறி
வந்தேயென்னன்பு மலராக்குருந்தடியில்
சந்தோஷமாகவென்னும் தாமிருப்போமாகையினால்
உங்களகத்தே யுகந்தெமக்குமுன்படைத்து
வைத்தெதிரேபூசை வகையாகத்தானடத்தி
வித்தகரேகொள்ளுமென வேதன்மறைந்திடவே
கனவிற்பெரியோர்தான் காட்டுகின்றதன்மையதை
மனதிற்பதித்தே மறையவர்களெல்லோரும்
ஆலமுண்டநீலகண்டர் அய்யனெழுதிற்கிடைத்தும்
சிலைமுள்ளநற்பயனைச் சேரவெமக்கிலையால்
ஈசனார்வந்தே எமக்குமொருதேசிகராய்
மாசகற்றவந்தவகை யறியாமற்போனோமே
தேவர்க்குந்தேவனை அவன்செப்புகனவிலையே
யாவர்க்குஞ்சொல்ல அவரவர்கள்முன்போல
விண்ணமிலாவன்னம் மிகச்சமைத்துநற்குருந்தில்
மனனுமாமற்சீக வகையாகப்பூசைபண்ணி
வருகின்றானார் மனதில்சினைநதனாம
தருகின்றானார் தனிமுதல்வனம்மானை
குருந்திலொளித்த குருபரனுக்கன்றுமுதல்
பொருந்துங்குருந்தீசரென்னப் புகல்வாருமறையோர்
திருக்குருந்தீசரென்றே தேசமெல்லாங்கொண்டாட
விருப்புமேன்மையதாய் மேவஅவ்வாறாகவிப்பால்
குருமுனிவர்நற்றமிழைக் கூறுந்திருநாடு
மருவிகந்தவைகை வழநாடழகாகும்
பூம்பொழிலுந்தெங்குமிகு பொன்போலக்காய்த்துதவும்
காம்புடைக்கமுகுகளும் கன்னட்கதலிகளும்
குயில்கூவுமாவும் குரங்கினம்வாழின்பலவும்

மயில்மேவுநன்கழனிப் பால்நிற்குங்கரும்பதனை
செற்றுலக்குற்றத் திறைகொளரசன்மாறன்
நற்றவர்க்குமற்றவர்க்கும் நல்லவனும்புவியில்
குலத்தைவிளக்கவந்தோன் குணக்குன்றமாயுவந்தோன்
நலந்தனையனுசரித்து மரோசனரிமர்த்தன்
பாண்டியநன்னாட்டில் பலவாம்பதிகளதில்
வேண்டியபல்பாண்ட மிருவாதவூர்தனிலே
வாழுமறையோரில் மாதவத்தனங்குமொரு
தாழ்வில்லாச்சைவத் தலைவனவன்றேவி
அருந்ததியையொப்பாள் அவடன்றிருவயற்றில்
பெருந்திரவியம்போல் பெருமானருளாலே
தென்னவன்செங்கோல் முதல்வர்சிறப்பாய்ப்பிறந்தார்
நன்னயமாயன்னைபிதா நற்றவரைத்தான்வளர்த்து
கருமாறுப்போகவின்பம் காணுஞ்சிறுவருக்கு
திருவாதவூரரென்றேச் செல்வர்தமக்குப்பொருத்தி
பேர்வைத்தார்சீராகப் பேசும்பருவமடுக்க
நீர்வைத்தார்தொண்டருக்கு நீலருத்திவைத்தார்
வனப்பமைந்தசெல்வ வாதவூரார்தமக்கு
இனத்தவர்கள்கூட யெழில்குடுமிக்கல்யாணஞ்
செய்தேசிவனருளால் சேருஞ்சிவஞ்ஞான
மெய்தமகாசுகபவந் தெய்துமபடிக்கவர்கள்
நல்லதினமபார்த்தே நன்றாய்ப்படிக்கவைத்து
வில்லாற்புருவருக்கு மேலாமுபநயனம்
பெல்லாமுறைவிதிய செல்லாம்பழக்கிவைத்தார்
பல்லார்மதிக்கப் பதினாறும்ஆண்டினுக்குள்
கற்றுரைக்கற்றார் கலைவல்லோரென்றுரைக்க
பெற்றாரதிகப் புகழ்பெற்றேயுரைநாளில்
தழைக்ககல்விமாறன்சபையிற்பெரியோர்கள்
உழைக்கானுக்கன்பாகும் உத்தமரேமேலாக
சொன்னவிதங்கேட்டரசன் சூட்சமதாகவேயழைத்து
மன்னனினிய வசனமிகவாய்ப்பேசி
நல்லோரெனவே நயப்புற்றுமந்திரிமார்
எல்லார்க்குமன்னே ரிவரெனவேயங்கிருந்து
ஆழிகொடுத்தே யரசன்றனதாக

பாழியந்தோள்மேலவனைப் பார்த்துக்களிப்புடனே
தென்னவனற்பிரம ராயரெனவேசிறக்க
மன்னவர்கள்யாரும் மதிக்கப்பெயர்கொடுத்து
விலங்குபூண்பீராம் பாந்தாளவெண்குடையும்
துலங்குசிவிகைபரி சூநீளவகாளுடனே
ஆனைகொடுத்தான் அழகேசனெங்கராய்
ஏனைப்பலபண்டம் இராசன்கொடுத்ததனை
பெற்றேமிகுபுகழை பெற்றசகத்திநலம்
முற்றேயறவழியை யுற்றேயமசனற்றேருள்
பாரஞ்சிரசில் பதித்தேசகலருக்கும்
சாரமதாகத் தயையாய்நடப்பதுடன்
மேலோர்தமையழைத்து வேதநூலைப்படித்து
நூலோர்நயப்பரவே நுவலரியப்பொன்கொடுத்து
வாசிப்பார்போதமிகு மாதவத்தோர்யாவரையும்
பூசிப்பார்பஞ்சப் பொறியின்வழிப்புத்தியதைப்
போக்கார்திருவருளைப் போக்கார்மனமும்நிறை
வாக்குமொருவிதம தாக்கிச்சகவாழ்வை
பொய்யென்றுணர்ந்தார் பொருளாஞ்சிவமயமே
அய்யமறமெய்யென் றறிந்தாரறிவுடையோர்
பற்றறுத்துமெய்யர்ப் பதங்காட்டிவிப்பதற்கு
நற்றவனைத்தேடி நயப்புறுமன்னனிலை
கவரியிருபுறமும் கன்னியர்கள்வீசிநிற்க
தவமுனிவர்வேதியர்கள் தானேநிறைந்திருக்க
பாவாணர்பாட பலவாத்தியமுழங்க
மாவார்புயத்தரசன் மணியாரசிம்மாசனத்தில்
வீற்றிருந்துலோக விசாரணைசெய்போதினிலே
போற்றிநின்றுதூதர் புரவலர்முன்சென்றுரைப்பார்
சிறியராஞ்சோழ மகாராசன்திருப்புவியில்
ஆரியதேசத்தார் அழகுமிகுநற்பரிகள்
கொண்டுவருகின்றாரே குறைவில்லாவப்பரிபோல்
கண்டதில்லையென்றே களரினாரவ்வார்த்தை
கேட்டபொதியப் பொருப்பன்கிருணபயினல்
ஓட்டேர்திருவாத வூரரேபோதுமென
வெண்ணிநீர்போய அவ்விரும்பரிகளத்தனையும்

நண்ணிமாசில்லாத நற்பரியைத்தேர்ந்தறிந்து
கொண்டுவருவீரென்னக் கொற்றவனும்நற்பொருளைக்
கண்டார்வசமாய்க் கனதையுமேமேலெழு
கோடிபொன்னையன்று கொடுக்கக்குதிரைகொள
நாடித்துப்பலுகூதம் நாடிப்பயணமென
பல்லக்கிலேறிப்படு உயரணைமேலபபணமும்
செல்லச்சதுரங்க சேனைசெலவாணதிர
தம்பூரடிக்கத் தரணியுள்ளவாத்தியங்கள்
பம்பெம்பெனமுழங்கப் பண்புளர்பின்பற்றிவர
கொங்கணர்கலிங்கரொடு கொங்கதிருநாடருடன்
சிங்களர்களொட்டியர்கள் தெலுங்கர்திருச்சினருடன்
பற்றாஞ்சற்றில்லாத பாக்கியரைத்தென்மதுரைக்
கோற்றவனென்றுள்மதித்தக் கொற்றவர்கள்கூடிவர
இத்திரமாக வெழுந்தபடையோடுங்க
தத்துபரிமீதிலுள்ள தமிழ்வாணர்சூழ்ந்துவா
பாங்குள்ளபெண்கள் பயில்வினையுஞ்சூழலுர்
தாங்கிசைகள்செய்துசில சாமரைகள்வீசிவர
பாடர்கள்பாடப் பலமாதர்களாட
வாடகமாமென்ன வடர்மீன்கொடியிலங்க
மங்கலத்தினத்தனிலே மாழிகையைவிட்டகன்று
திங்களணியும் சிவனார்தனைவணங்கிச்
சென்றேவழுதியருள் பெற்றேசிவனடியோர் .
நன்றேபொருந்தும் நயமதுரையைக்கடந்தார்
கெட்டதாமேலக்கடலெழும்பி கிழ்த்திசையில்
கிட்டவருமாப்போல் கியம்பியவெரம்மலையும்
காடும்பதியுங் கடந்தேதபவமகலச்
சாடும்பெருந்துறையில் தானையொடுமேயினரால்
மின்னுவெள்ளியம்பலத்தில் மிக்கநடனஞ்செய்த
மன்னன்காத்தில் மழுவுழைகொண்டின்னமுதஞ்
சொல்லாளிடபாகத் தற்றுநகைமலர
எல்லார்கைலையங்கிரியி லொருமண்டபத்தில்
ஆதிபகவன் அகமகிழ்ந்தேவீற்றிருக்க
சூதில்லாநற்றவத்தோர்சூழ்ந்தொருங்கேதெண்டனிட்டு
மதுவார்மலர்தூவி மனுமுதலெல்லாமறந்து

முதுமறைகளோதியான் முன்னிற்கமாலயனும்
சமையமெனவவர்கள் தங்கள்பதமேலாக
அமையுமண்மையுமென யஞ்சலிசெய்கெஞ்சிநிற்க
பரன்வடிவும்நீலநிறப் பத்தினியார்தன்வடிவும்
கண்டேபுரந்தரனும் தேவர்களுங்கைகூப்பி
வண்டாயும்பஞ்சத் தறுவினறுமலரைத்
தாவியகமலரைத் தாவிப்பவமதனை
நீவிவரமுதவும் நேரமிதுவாமெனவே
ஆவலுடன்மாலயனும் அண்டருலகக்கோவுந்
தேவர்களும்யோகிகளும் சேர்ந்தொன்றுகநெருங்கி
வண்மைமிகுத்தவுடை வாழும்பிரம்புடனே
புண்டரீகமாதும் புலிமாதயன்மாதும்
துன்னுபலபூதகண நாதர்புடைசூழக்
கின்னரர்கள்கந்திருவர் கீதவிசைபாட
மின்னுமுடிமன்னுந்தி வீசுமலையதுவாம்
என்னவெழிற்சாமரைகள் அழகாகவெய்திடவும்
அந்தமிகுந்தவவனி யட்டியாரபுடைசூழ
விந்தைமிகுந்தசபை மேவிநடனம்புரிந்தோன்
கல்விக்கடலைக் கடைந்தேபமுர்தமுண்ணும்
செல்வர்தமையாள நறுந்தேனுரிதயமுடி
அப்யர்மன்னருருவே யாகிச்சபைநிறைந்த
மெய்யரொடுபூதகண நாதியரெம்போலாக
வாருங்களென்னவந்தார் மாகைலைவிட்டகன்று
சீருங்குருவுமுள தெய்வப்பதியடைந்தார்
பிறவிக்கடலிற்புகுந் துழலுகின்றவரை
திறமாஞ்சிவநாமம் என்னுந்திருப்புணையை
பற்றிக்கரையேறும் பங்குள்ளநல்வழியால்
உற்றபெருந்துறையென் றோதினருத்தமர்கள்
ஈனஞ்சற்றில்லாப் பெருந்துறையெனும்பதியில்
கானமிகுபுன்னைமரங் கதமுளசந்தமொடும்
சுந்தரஞ்சேர்சண்பகமும் துலங்குநந்தமொடு
கந்தரமளாவுகின்ற கனத்தசெருந்தியொடும்
கொம்புகளையுடைய கொரங்குபலாக்கமுகும்
அம்பரமளாவுகின்ற பாடலமுமந்தாரமதாம்

முருக்குங்குரவும் மகிழும்நெருக்கமுற
விருக்கக்கரியகுயி லின்பமுரக்கூவுதலும்
குரங்குபழக்குலைமேற் குதிக்ககலைந்தெழும்பி
ரெண்டேயாழிகள்திரு மேல்விசைகள்பாடிடவும்
வீழ்ந்தகழுந்தேன்றுளிகள் நயனநீராகச்
சூழ்ந்துமுரல்வண்டினிசை தோத்திரமதேயாக
வந்தனைசெய்தேத்திமலர் மைத்திறைவன்முன்னின்று
சிந்திக்குமன்பரெனச் சிறந்திடுமங்காவதனால்
மத்தியினின்று வளருந்தவக்கிளைகள்
பத்தியாய்நின்றே பரன்றனைக்கண்டேற்றுகின்றார்
சித்தம்போற்பூத்தவர்கள் தேகம்போலத்தளிர்கள்
வித்தம்போற்றார்ப்பொருந்தி வேதநெறிதப்பாத
அறிவுடையார்போல அகன்றிலங்கார்வின்குருந்தில்
மறிமாவுங்கரந்தோன் மாதண்டர்தம்முடனே
சிந்தைமகிழ்வாக விருந்திருவாதவூரர்
சுந்தரர்தம்பாசம் தொலைக்குங்காலம்பார்த்து
அந்தமிலாதான் அருள்சுரந்தேவீற்றிருக்க
பந்தவினைபோக்கிப் பதம்பெறுவாணிவ்வழியே
மேவினர்தொண்டர்சொலும்வேதமொழிகேட்டுவந்தார்
எவியவராலறிந்தே யெல்லையிலாதேமகிழ்ந்து
தாயைக்கண்டோடும் தனயனெனவேகமுற்று
மாயைத்தொடைத்தின்ப வழிகாட்டுடையவர்பால்
வந்துமனத்தால் வணங்கிவணங்காராய்
அந்தமிகுமந்திரிமார் அங்கமுடனங்குநின்று
காதிற்சிரசிற் கழுத்திற்றிருமார்பன்
மீதுமிரண்டுகர மீதுமுருமுத்திராட்சம்
பூண்டுதிருநீற்றைப் பொருந்துநுதலிற்சாத்திக்
காண்டாக்கரிய கனகமாய்விளங்கும்
மேனிமுற்றும்வெள்ளைப் பொடியணிந்துமென்கரத்தில்
தானிருக்கும்புத்தகமெனச் சாற்றுமெனவேயுரைக்க
அய்யாசகலசிவ ரய்யர்அகமகிழ
மெய்யாஞ்சிவஞான போதகமாமென்றுரைக்க
சிவமென்னும்ஞானமென்னும் செப்பியவப்போதகத்தை
விவரமதாயெனக்கு விண்டுரைப்பீராமாகில்

கல்லாலினீழ லிருந்துகதியுதவும்
வல்லானெனவே மதித்தடிமையாவனெனச்
சொன்னவிதங்கேட்டுச் சொல்வானவன்மன்னவனும்
மன்னுசிவமொப்பிலது ஞானமதனைத்தெரிதல்
ஞானந்தனைத்தெரிதல் நற்போதகமுமது
உள்ளமிலாவீட்டை யுகந்தழிக்குமென்றுரைத்தார்
புரையில்மதிவேந்தான் புகன்றதுகேட்டுளமகிழ்ந்து
வரைத்தடந்தோள்மந்திரி மனதோடுரைத்திடுவார்
மன்றுள்நடமாடும் மகாதேவரிங்கெழுந்து
இன்றடிமைகொள்ளவிவர் வந்ததேதென்று
கொண்டுநிலையில்லா குவலயத்திறுசையெல்லாம்
விண்டுதிருத்தாளில் வீழ்ந்துபணிந்தெழுந்து
என்னையடிமைகொள்ளும் என்றேதுதித்திறங்கி
அன்னைதனைக்காணு கருங்குளவிபோலழுதார்
அழுதார்முகம்பார்த்தே அய்யர்சபைவீற்றிருக்கும்
பழுதிலாமாதவத்துப் பனைபுளரிமேலொருவர்
எழுந்திறைவன்முன்னின் றிருகாங்கூப்பித்தொழுது
செழுஞ்சடையாயிங்கிவர்க்குள் செல்வத்திருப்பாதம்
கொடுத்தாளவேண்டுமெனக் கோலமுனிவனுரைக்க
தடுத்தாட்கொள்மெய்யன்பன் தானையுசற்றிசைந்து
அத்தம்புவிபெண்டீர் ஆசையிலாயுன்றனக்காய்
இத்தலத்தில்வந்தோம்நீ யெய்துதவப்போதனுல்
மெய்த்தவனேயாமுனக்கு வேண்டும்பதங்கொடுத்து
வைத்திருத்திக்கொள்வோம் மயங்காதெனவுரைத்து
தன்னெதிரேநின்ற தவத்தோர்தமைப்பார்த்து
விண்ணமுறுதிங்குவந்த வேதன்றனக்கினிய
உபதேசஞ்செய்ய வுவந்தோமதற்கிசைய
கபடில்லாகற்றவரே கட்டிடுவீர்கோயிலென்றார்
என்றேயரனுர் இதுபுகலவேதவித்தோர்
அன்றேயழகா யமைத்தார்திருக்கோயில்
கோவிலமைத்தே குருமூர்த்திவீற்றிருக்கை
பாவித்துநல்ல பரிவாசனமமைத்து
வல்லானேநீயுரைத்த வாறேதிருக்கோயில்
எல்லாம்பொருந்தும் விதமாய்ச்சமைத்ததென்றார்

அப்போதுமேற்றிசையில் யாதவனும்போய்மறைய
செப்புமிரவிற்கடிகை சேரும்பதினைந்தாக
இங்கிவனையாள இதுகாலமென்றெழுந்து
புங்கவனுமஞ்சனச்சாலை புகுந்துகுங்குமமும்
சாந்துபுனுகுங் குழைத்துந்தன்தேகமெல்லாம்
பந்தமுடன்பூசிநறும் பன்னீரிலேகுளித்து
மெய்ப்புனலைமாற்றி விலைமதில்லாதநல்ல
வொப்பருஞ்செம்பட்டாடை யுற்றணிந்துபூதியிட்டு
அந்தமுள்ளகோயில் அதற்குள்புகுந்தினிய
சுந்தரஞ்சேராசனத்தில் சுந்தரஞ்சேர்தென்முகமாய்
வீற்றிருந்தார்தம்மை விரும்புமடியார்பின்
ஆற்றிலுயர்வுளதாம் என்னுங்கயத்திற்குளித்து
வெள்ளைத்துயிலணிந்து வெண்பூதியேதரித்து
கள்ளமிலார்சிறியர் கஞ்சமலர்த்தாள்பணிந்து
நற்புனல்கைக்கொண்டு நலமாயபிஷேகம்
பொற்புறவேசெய்து புனுகுசவ்வாதணிந்து
சந்தனமுங்குங்குமமும் சங்கையிலாப்பூச்சரமும்
அந்தமிதுவாதியென் றறியக்கூடாதவர்கள்
சாத்திப்பருப்பணமும் சற்கரையதன்னமுடன்
நேத்தியுளமுப்பழமா மெய்துமிகவேபெய்து
மாலயன்வலாரிமற்ற வானோர்பிழைக்கமுனனாள்
ஆலமுண்டாயிந்த அமுதம்பொசியெனவே
பொய்யில்லாவாக்காற் புகன்றேதுதித்துநிற்க
அய்யனுண்டுநீரால் கரங்கழுவியானதின்பின்
நாகவல்லிதுவர்க்காய் நல்கித்தூபதீபம்
தேகமெல்லாங்காட்டத் திருநீறுதானணிந்து
வெள்ளைக்குடைக்கவரி மின்னாலவட்டமுடன்
தெள்ளுதவவடியார் சிறப்பாயெடுத்திடவே
பொற்றவிசின்மேவும் புலித்தோலுடையவர்முன்
பற்றறுத்தமெய்யர் பணிந்தங்கிருந்ததன்பின்
எங்குந்திரிந்தோன் எளியோர்தனக்கிறங்கி
பங்கமிலாப்பஞ்சாட்சா முபதேசமுரைக்கப்
பெற்றுத்தவவடிவுப் பெற்றப்பழவினையாம்
பற்றுக்களையெல்லாம் பஞ்சாய்ப்பறக்கடித்து

அஞ்ஞானமெல்லாம் அகன்றேசிவமயமாய்
மெஞ்ஞானந்தேர்ந்தார் விழியிற்புனல்சொரிய
ஈறிலாவேறோர் இணையில்லாயுன்பதத்தை
மாறில்லாவின் றுணைபாய் வந்தவெனக்குன்னையல்லால்
மற்றுண்டோவென்பார் மலரார்பதமதனை
உற்றுச்சிரமதனில் ஒற்றிப்பணிந்தெழுவார்
படிமீதிலென்னுடைய பாசந்தனைத்தொலைத்து
அடிமுடியுமில்லான் வந்தாண்டகருமையென்பார்
நன்னடக்கையில்லாத நாயேன்றனைக்காக்க
தன்னவனுக்கென்னமனந் தானோவெனவுரைத்து
ஆலமுண்டாய்தொண்ட ரகத்தேகுடிபுகுந்தாய்
காலன்றனையுதைத்தாய் கையில்மழுமான்தரித்தாய்
கருக்குழியிலின்னமிடம் காட்டாமலெந்தனக்குன்
திருப்பதமேவீடாகச் செய்தருள்வையென்றிரந்து
வாதவூராரை மதித்தேயகமகிழ்ந்து
வேதத்துக்கெட்டா விமலருமங்கேதுரைப்பார்
தொல்லையிலநேர்செய்த சுகுர்தபலத்தாலுனக்கு
எல்லையிலாநற்கெதிவந் தெய்துமெனலாமதற்கு
சிற்றறிவைப்போக்கும் திறமுனக்கேதில்லையதைப்
பற்றிநமதுதிருப் பாதந்தனைக்கொடுத்து
காத்துக்கதியுதவும் காலம்பார்த்தெம்முடனே
சேர்த்துமருகிருக்கச் செய்வோமெனவுரைத்தார்
அப்போதுவேந்தன் அகமாயைமாய்ந்ததுபோல்
செப்புமிருள்போயதன்பின் சிவஞானடியார்பால்
சிவஞானமென்னுமினித் தீபம்போற்செங்கதிரோன்
புவனமெலாம்புரக்கப் போதுமரசரெனக்
கடலீலுதயமது காட்டவண்டர்க்காகமுந்த
விடமயிலின்னோன்றனடிக் கீழ்மேவுமடியவரைப்
பார்த்துச்சிவாகமத்தில் பகரும்பொருளதனை
அருவமொன்றுபேரொளியொன் றிருவுளமும்மூன்றிலே
உருவமதுவே முரைத்தகுருவடிவாம்
வெளியாகக்காணும் லிங்கமருவுருவாய்
ஒளியாயடிமுடியாய் யுவப்பரும்அருவமதாய்
இத்தகையதாகும் எமக்குப்பிரியமுள

பத்தர்களாரென்னில் பகர்வேனெமதடியார்
ஏவல்செய்வார்புஷ்பம் எடுத்துச்சரந்தொடுத்து
ஆவலாயெம்மை யகத்திருத்திப் பூசைசெய்வோர்
நாமிருக்குங்கோயில் நன்மாயலகிடுதல்
பூமிமெழுகல்விளக் கிடுதல்மகதலத்தோர்
ஆலயங்களெல்லாம் பணிந்துமதில்வசித்தும்
சிலமுள்ளோர்தங்கள் சென்னக்கொடியறுத்து
நல்லசாலோக பதவிநயந்தளிப்போம்
தொல்லையிலாப்பஞ்ச சுத்திதொட்டார்சாமிப்யம்
அஞ்செழுத்தோரெழுத்தாய் யறிந்தார்க்குச்சாரூப்யம்
நெஞ்சுகந்தேயளிப்போம் நெடிதாங்கலையுழுது
ஆகம நூல்கள் அனைத்தும்பலசமைய
போகத்தி நூல்கள் தனைப் புந்தியுறவேதெளிந்து
முப்பொருளாமெம்மை மனமுற்றுச்சிவஞானம்
மப்பொருளார்நெஞ்சத் தவர்க்கேசாயுச்சியபதம்
கொடுப்போம்நாமென்னக் குருபரனுந்தாமுரைத்து
நடுத்தாட்கொள்மெய்யன் தனதாகவீதுரைப்பார்
உன்கைப்பொருளும் உயிருன் னுடம்பதுவும்
என்கைப்பொருளாயினது இங்குன்றனைப்போல
வந்தவெமது வடிவேபொருளாக
சிந்தியெனவந்தமிலார் செப்பிடவேநற்குணத்தோர்
ஆதிபகவான் அடியைத்துதித்தெழுந்து
சூதிலாமாதவத்தோர் சொல்வாரகமகிழ்ந்து
பற்றகலாவென் னுடைய பொல்லாப்பழவினையை
மாற்றியெழுபிறப்பின் றேகவினையாண்டருளும்
நாதாவென்சொந்த நகைபட்டுடைபுடனே
போதவேதென்னன்பரி கொள்ளக்கொடுத்தபொன்னும்
தேகமென்னதுபிரென் செயலுமுமதெனவே
நாதந்தனையுரித்த நாயகனார்முன்பாக
நின்றுதவர்துநின்ற மறையோர்தமைப்பார்த்து
விக்ககருஞ்சொல்வார் மேம்படுபொன்னத்தனையும்
கோவில்திருப்பணிக்குங் குறமற்றநற்றவர்க்கும்
மேலிவருமன்மைகட்கும் இன்றளிப்பீரென் றுரைக்க
தம்பெருமான்சொல்லைத் தலைமேற்கொண்டவ்வகையே

செம்பொருள்கள்யாவும் சிவனடியார்கைகொடுத்து
நீலகண்டர்வீற்றிருக்க நெடுமதிலுங்கோபுரமும்
கோலமுள்ளமாதவத்தர் கோவில்வேலையைத்துடங்க
பதஞ்சலிவியாக்கிரமர் பார்க்கப்பதந்தூக்கி
விதவிதமதாகவெள்ளி யம்பலத்திலாடுகின்ற
சங்கரனூரன்றளித்த ஞானமருந்ததனால்
பங்கமிகுனோயகற்றிப் பண்புள்ளசித்தரானார்
இமையமயமென்னும் எழிற்சிவிகைமீதேறி
அமைவில்லாச்சேனை யடர்ந்தேநெருங்கிவர
மன்னனெனவந்த வாதவூர்யோகியரும்
முன்னவன்றனீறு மொளிக்கோவணவுடையும்
விரித்தகுடுமிச்சிரமும் மேவுருத்திராட்சவடமும்
கருத்தழிக்குங்கண்ணீருளக் கவலையுமுள்ளாளரெண
அய்யனேயென்பார் அழுவாரகமகிழ்வார்
மையவேசென்றிடுவார் பாய்வார்குதித்தெழுவார்
கலக்கமடைந்தவர்போல் காணுவாராகவிதைத்
துலக்கமுறவேமூன் சுற்றிவந்தவெல்லோரும்
சேல்போலுங்கண்ணுமைதன் திருவிறைவன்தன்னருளால் [ளால்
பால்போயானந்தமிகும் வாதவூராரருகில்
வந்தடியிற்றாழ்ந்து வணங்கியெழுந்துநின்று
பந்தமெலாமகற்றும் பாக்கியரேபாண்டியனார்
சிற்றங்கொள்ளாமுன்னே செழும்பரிகள்கொண்டேக
யேற்றவண்ணமில்லா யிருக்கின்றீர்ஞாயமதோ
அய்யாவருவீரென் றழைத்தார்அழைத்தவுடன்
செய்யதிருநீறணிவார்த் தேர்ந்தறியாய்ப்பொய்யுடைய
மையலுறுமனத்தீ ரார்கீர்மனமறியா.
பொய்யுரைத்தவெல்லாம் பொருந்தாதகன்றிடுவீர்
சிவனடியாரிவ்விதமே செப்பவேநட்புடையோர்
கவனமிகுந்திதென்ன காலமோவென்றிரங்கி
நம்மொழியுங்கேளார் நலமேசிறிதுமிலார்
செம்மலிடஞ்சென்றிதனை செப்புவோமென்றிவர்கள்
நடந்தார்ந்துறைசை நகரதனைவிட்டகன்று
திடஞ்சேர்மதுரை திருநகரில்மன்னவனை
கண்டேமனதிற் கவலையுடனங்குநின்று

விண்டேறும்விம்ப மலரோய்சரணமென
கைகூப்பிநின்று கழறுவார்பின்னுமம்
மெய்யாகக்கொண்டதிரு வேதியனார்பின்னுடனே
சென்றேபெருந்துறையில் சென்றோமதில்வளமாய்
நன்றார்பூஞ்சோலை நடுவேயொருகுருந்த
விருச்சகத்தருகே வெகுவாய்த்தபோதனர்கள்
இருக்கப்பெரியவரா மென்றொருவர்வீற்றிருக்க
கண்டேதிருவாத வூரார்களித்து
தண்டார்மலர்தூவித் தானவனைத்தெண்டமிட்டு
குருவாகக்கண்டு குதிரைகொள்ளவேயழித்த
மருவார்செம்பொன்னையெல்லாம் வாரியவர்க்குக்கொடு
நல்லுடையும்பொற்பணியும் நாடாதசிந்தையுமாய் [த்து
செல்வார்போலச் சிறந்திடுவக்கோவணமும்
தலைமுற்றுருத்திராட்சஞ் சடமெல்லாம்வெண்ணீறாய்
அலைகின்றார்தம்மை யடுத்தடுத்துநாற்கள்சென்று
கேட்டாலும்பேசாக் கிருக்கடைந்தாரென்றுரைத்து
வாட்டிறல்சேர்மன்னன் மலர்ச்சரணம்போற்றிநிற்கும்
சேனாபதியள்வந்து செப்பியதோர்வார்த்தைதன்னை
வாளுடனேச்செயித்த வள்ளல்கேட்டேசினந்து
உடல்வேர்த்துகண்சிவந்து ஓகோவெனநகைத்து
கடகடனவேநகைத்து காவலனுமேதுசொல்வான்
புவனத்திலிவ்வமைச்சன் போலகிடைப்பதற்கு
தவமியற்றினாலுங் கிட்டாதாகுமிவனெனவே
நற்பரிகள்கொண்டுவர நாமளித்தபொன்னையெல்லாம்
பற்பலர்கள்கொள்ளப் பலியெடுக்குமாண்டிகொள்ள
செய்தவஞ்சகன் திருவாதவூரனெனும்
கைதவனுக்கிவ்வோலைக் காட்டுமெனவேயாசன்
எழுதுவானிவ்விடம்விட் டேகிப்பழுதகன்ற
சுழிகொள்புரவிகொளா துற்றீர்துறவறத்தை
தன்மமேமேலாம் துறவறத்தைதான்கொடுக்கும்
கன்மங்கொடுக்குமெனக் கண்டநூலென்னாலோ
நம்பும்அரசர்க் கரும்புகளைநாட்டவல்லோன்
அம்புவியிலுன்போ லறிந்திலனாமாகையினால்
இவ்வோலைகண்டவுடன் வாயில்லாராமாகில்

எவ்வாறேதுவருமோ வென்றெழுதும்ஓலைதன்னை
தூதர்கையிலேகொடுத்து சூதாகப்பொன்னையெல்லாம்
சேதப்படுத்தும் திருவாதவூரனையே
கூட்டிவாவென்று திருகூடற்பதியுரைக்க
கேட்டுமெனத்தூதர் கெம்பீரமாயெழுந்து
செய்யாளுரைமதுரை விட்டேசிவனடியார்
கையிலேஓலை கொடுத்தேகரங்குவித்து
தென்னுடையான் திருவோலையாமிதனை
இன்னதெனத்தேர்ந்தின் றெழுந்தறியுமென்றுரைக்க
வாங்கியருகில்நின்ற மாதவரைத்தான்பார்த்து
பாங்குளவின்னோலைதனைப் படிப்பீரென்றுரைக்க
வாசித்தார்கேட்டதுவென் மாயமிதுதானெனவே
யோசித்தார்தேர்ந்தார் உயிருக்குயிராயுற்றவர்பால்
நேயரன்நற்றுமலரைப் போற்றிப்பணிதெழுந்து
தாயிலுமன்பேமிகுந்த சங்கரனேபங்கமிலா
பாரனெழுத்தோலையிதின் வாசகத்தைக்கேளெனவே
தேருமனதன்பர் திருவாய்மலர்ந்துரைக்க
கேட்டேயரனார் கிருபைமிகுந்தேயரசன்
யீட்டுப்பொருள்கட் கிசையும்நறும்பரியாய்
கொண்டுவருவோமிக் கோவழுள்ளதூதனொடு
தண்டயங்குதாரான் தமிழ்நாடன்முன்புசென்று
குத்தமற்றநற்பரிகள் கொண்டேன்பெருந்துறையில்
உற்றப்பரிகளெல்லாம் உம்முடையநற்பதிக்கு
கொண்டுவரநன்னாள் குறிப்பிடவவ்வேதியர்கள்
விண்டாவணிமூலமே நயமாமென்றுரைத்தார்
அந்தநாளாகுமட்டும் அங்கிருந்தேனுத்தமர்கள்
தந்திருஓலைதனைப் பார்த்தினிமையதாய்
அந்தமிலாதான அமைச்சர்வடிவுக்குகந்த
மணிதிழைத்த பொற்கலனும் மாசிலாபட்டுடையும்
வரிக்கல்லடித்துக்கழிந்த கல்லெடுத்துமாமணிவில்
எரிக்கவுழைத்தெடுத் தியல்பாகக்கைகொடுத்து
தொன்மதிக்குலத்தரசன் துன்பமேசெய்வனென
நின்மதிக்கவலைகொள்ளா தேகெனவேநீறணிந்து
போவென்றுரைத்திடும் புங்கவன்றாள்வணங்கி

ஆமென் றுவாய்விட்டு யழுதுமனம்பதறி
பலகால்துதித்தே பணிந்துபணிந்தெழுந்து
விலகமனமில்லா வெனைநீத்தையோவெனவே
கண்ணிற்புனல்சிந்தக் கபாலிவிடைபெற்றேகி
நண்ணும்பெருந்துறையை விட்டகன்றேநாள்தோறும்
செழித்துவளர்ந்தோங்கும் திருமதுரைசென்றுகந்து
வழிக்கேயருந்துணையாம் வள்ளல்தனைநினைந்து
தென்னவனைக்கண்டு வணங்கிசிவமளித்த
மின்னுமணிகையில் கொடுத்துநின்றமேலவனை
முன்போலிருமென்று புகழ்ந்துசொல்வீற்றிருந்தார்
வீற்றிருந்தாயந்த வெழில்மாமணியதனில்
யேற்றுவகைமிக்கூர்ந் திவுளிகொள்ளவேகியநீர்
வாராதிருந்தவகை யேதென்றுரைத்தலுமே
காரார்களத்தார்க் கடியாரிதுவுரைப்பார்
மன்னுவனதாம் அரும்பொருள்கைக்கொண்டேகி
பன்னுடரும்வியந்துப் பண்புளதென்றேமதிக்க
தக்கதாய்நற்குதிரை தான்கொண்டேமதுபதி
புக்காட்பார்க்கப் பொருந்தமாவணிமூலம்
என்றுமறையோ ரெடுத்துரைத்தாராதலினால்
இன்றுவரையங்கிருந்தே னென்கூடவன்றுவந்த
நின்படையோர்சுற்றமுள்ளோர் நின்பதிக்குச்செல்வமே
அன்பனுமில்லாத பொல்லாதவருரைத்த
கட்டுரையைக்கேட்டுவந்து கண்டிப்பாயோலைவர
விட்டதறிந்தின்றுவந்தேன் மேல்க்குறித்தநாளதனில்
வர்ன்னப்பரிகளிங்கே வந்திடுமென்றார்கேட்டு
அண்ணல்மகிழ்ந்தே அரசடியார்க்கிதுரைப்பார்
வஞ்சகர்கள்சொல்லை மதித்தேனியானுமங்கு
அஞ்சலிலோலை யனுப்பலானேனதைப்பொருப்பீர்
என்றரசனன்று யவ்வார்த்தையிதுரைத்து
அன்றலர்பூத்தாராக் கணிகலனும்வஸ்திரமும்
கொடுத்தரசகாரியங்க ளெல்லாங்குறித்துரைத்து
வடிப்பொருந்தார்தம்மை மனைக்கேகுமென்றுரைக்க
ஈசனகமுற்று ரெழில்சோகமடைந்து
பாரமெலாமற்றே பரிவாயிருந்ததற்பின்

நற்பரிகளிங்குவர நாளிரண்டதாயிருக்க
விற்காத்திலேந்துகின்ற வேந்தன் தனித்திருந்தான்
அப்போதுமந்திரிமார் அவர்கள்தனிலேயொருவர்
தப்பாதசொல்லுடைய தார்வேந்தன் தன்னிடத்தில்
வந்திறைஞ்சிநின்று திருவள்ளலேயுன்பெயரை
அந்தமதாய்க்கொண்ட திருவாதவூரானிவன்
தன்பணத்தையெல்லாம் தவத்தோர்க்களித்துவிட்டு
அன்பகத்திலரனை யழைத்தெதிரேகேட்பதற்கு
உயிர்பிழைக்கவேண்டி யுவந்தேயரும்பரிகள்
செபிரறவேயிங்குவரு மென்றுனச்செய்திதனை
நம்பாதிரென்று னதுகேட்டரசர்பிரான்
துன்பமிகவேதியன்றோர் தூதன்றனையழைத்து
பெருவளங்களுற்ற பெருந்துறைக்கின்றேகியங்கு
மருவிகந்தவாம்பரிகள் வந்திருக்குதோவெனவே
அங்கோடிப்பார்த்திங் கறிந்துவாவென்றுரைக்க
திங்கள்குலத்தோன் றிருத்தாட்பணிந்தெழுந்து
பெருந்துறையுமற்ற பிரிதிவுவூருதேடி
வருந்தூதர்மன்னு வயப்பரிகள்காணமென்றார்
என்றுரைக்கமன்னன் இருகண்சிவந்தெழுந்து
நன்றிசெய்வான்போலே நமக்கிடர்கள்செய்தவனை
தெண்டிதனையுங்கண்டனையும் செய்துதயைவையாமல்
கண்டனையுஞ்செய்துசிறைச் சாலையிலேகாவல்வைத்து
பொன்னதனைவாங்குமெனப் பூபாலன்றானுரைக்க
கோன்மனத்தைக்கொண்ட கொடுங்காவலாகூடி
பாசமபழைபபடி துடர்ந்தபாவனைபோல்
வாசமுள்ளவேதியர்பால் வந்தேசினத்துடனே
நற்பரிகளிங்குவற நாளிரண்டதாகுமென்ற
இன்பமுறுமாதவத்தீ ரென்றரசன்சொற்படிக்கு
கண்டயங்குதார்மார்பர் த ய்துபொன்னையென
விண்டுரையாராக விருந்தாரிருந்தவரை
கொண்டுபோய்மந்திரிபாங் கோலமெலாந்தானீக்கி
வண்டலம்புதாராளர வன்சிறையில்காவல்செய்ய
மன துதளர்வில்லாத வாதவூரெங்கோனுஞ்
சினமதுசாற்றில்லாமற் சேர்ந்தார்சிறைச்சாலை

அன்றுநாகந்தரித்த வையரடியாரை
என்றுங்கதியடையா ரிடுக்கமதுசெய்வதனை
கண்டேபொருக்காக் கனலேகங்கொண்டெழுந்து
சண்டன்வருத்தமதாய் தன்னூருமேற்கடலில
சென்றொளித்தானாகச் சிவனாருளாலே
அன்றரசன்றன்மேல அடங்காதகோபமுற்று
சென்றொளித்தானாகச் சிவனாருளாலே
தன்பிரைமற்றொன்ற விழுங்கிடத்தன்வாய்திறந்து
நன்னுங்கொள்ளிவாய்ப்பேய்போல்நாடினதுசெவ்வானம்
பற்றிலார்துன்பமதைப் பார்த்துநகைக்குகின்ற
சிற்றறிவார்போல்முல்லை சிறந்துமலர்ந்ததுவாம்
தண்டமிழார்வேதத் தலைவன்மனைவருகதம
கண்டலர்நெஞ்சம்போற் கமலங்குவிந்ததுவாம்
தென்னவனார்வைகத சிறைபுகுந்தமாதவரை
அன்னகரார்காணில்வர் நாணமுற்றயலார்
என்றிராமங்கை யிருகரத்தாலன்னகரில்
சென்றுளார்கண்புதைத்தா ளென்னவிருளங்குவப்ப
மன்னன்பகையை மறுத்தழித்துமாதவத்தோன்
முன்னுளமைச்சரிமை கொள்ளமுறையெவ்விதத்தும்
இல்லையேயெனவூ ரிருக்கையுளாரேக்கமுற்று
வில்லையேயநன்னுதலாய் மேவுந்திருமாதர்
அன்பர்தமைநீங்கி யாற்றாமையால்வருந்தித்
துன்பமடைவரெனத் துயிலாதிருந்தழுவார்
சிவவடிவைக்கண்டினிய தெள்ளுதமிழோதுங்கி
தவவடியார்துன்பஞ் சருக்காருரைப்பார்போல்
ஆலகாலத்தையுண்டோன் சன்னதிமுன்னாகவந்து
சாலமுழங்குகின்ற சங்கின்றொனியதுவாம்
அத்தனசகலருக்கும் அத்தன்பரியேறும்
வித்தையதுகாண்பான் வெங்கதிரோனன்றெழுந்து
காலந்தனிலப்புவியி னங்குலத்துக்காவலனும்
சீலமுடனேயெழுந்து செய்கருமந்தான்முடித்து
தண்டரளமாலை தனித்துப்பணிதரித்து
விண்டாவுமுன்முகப்பில் விற்றிருந்தான்தென்னவனும்
அப்போதெழுந்துதண்டக் காரரெல்லாமன்றிரவில்

தப்பாதடைத்துவைக்க சற்குணரைக்கொண்டுவந்து
அருமைக்குடிமைகொள்ள வனநாசனறங்கபொருள
கருவாய்சாடாகவென்று காராவிடிலயாங்கள
செய்யாதவேலையெல்லாம் செய்வோமெனவிழுந்து
வெய்யிலிலேநில்லுமென விட்டாரக்காவலர்கள்
காவலர்கள்விட்ட கடுமையுள்ளவெய்யிலதில்
நாவதனிலஞ்செழுத்தை நாட்டுந்திறமுடையோர்
நின்றிளைப்பாறங்கும் நிறைக்கோன்பதமலரை
சென்றுவந்தேநெஞ்சோடு செப்புவாரென்னிடும்பை
பாராயோஅப்யா பரிகொண்டரசனிடம்
சேராயோவென்னிடத்தில் செப்பினதுபொய்யாமோ
உன்னுடம்பின்வாழ்க்கை யொழிந்துன்னடிமையென
மானிலமெலாமறிய வந்தடைந்தவென்னையுமுன்
இருந்தவிடஞ்செல்லென் றிருந்தீர்பெருந்துறையில்
வருந்துமென்னைப்பாரா வகைதானெனவேவுனது
அடியவராமென்றன் கொடியநமனஞ்சிடுவான்
படியதனிலென்தனைப்போல் பாவியுண்டோவென்றழுவா[ர்
மாலயனுமறையும் மற்றவருங்காணாத
கோலமதைக்கண்டும் குணப்பட்டேனில்லையென்பார்
வானுடையவர்க்கும் மற்றுலகத்துள்ளவர்க்கும்
தானானதந்துவனின் றனக்கடிமையானவெனக்
கிவ்வகைபாந்துன்ப மிகுந்திட்டாலெவர்கள்மனம்
ஒவ்வியடிமைக் குடன்படுவாரென்றுரைக்க
அவத்தொழிலைச்செய்யாத யன்பர்தனக்குவந்த
பவக்கடலில்வீழாமல் பட்சமாய்ச்சென்றழைத்து
ஆட்கொண்டமெய்யர் திருவய்யாமுளைக்கிறங்கி
வாட்டமசிக்காமல் நற்பரியெல்லாஞ்செலுத்தி
அன்பன்துயரகற்றி யாதரிக்கவேண்டுமென்று
என்பரவம்பூண்ட ஈசன்னிதயமதில்
புண்ணியனுமெண்ணிவனம் புக்கிருந்திருநரியை
நண்ணியேசேகரித்து நற்பரிகளாக்கிபதைச்
செலுத்துகின்றபாகரெனத் தேவரெல்லாஞ்சூழ்ந்துவர
வலுவுடையார்நெஞ்சில் மதித்தபடியன்றேதான
நற்காவிருக்கும் நரிகளெல்லாம்வந்துவந்து

பற்பலவாயுள்ள நிறப்பரிகளாகவும்
தேவர்களெல்லாந் திரண்டேயதற்கேற்ற
சேவர்களாகத் திருப்பரிமேற்கொண்டிடவும்
கரைமிடற்றண்ணலவர் கந்துகத்தின்வாணியர்போல்
மறைப்பரியின்மீதேறி வரவேயிருபுறமும்
நெருக்கமதாய்ப்புரவி நின்றுலவுகின்றனவும்
திருக்கிளருமாடவர்கள் சென்றேறியன்றதனை
நடத்திடவுந்தூளியது நாற்றிசையைமூட்டிடவும்
கடகடெனக்கொம்புடுக்குக் காகுளியோடம்மானம்
தகுணிதடாரியண்ணந்துந்துபிகள்தான்சேர்ந்து
மருகுதருகுகென வையமெல்லாந்தானதிர
விதியனைநீக்குமெழில் மதுரைமாநகரில்
குதிரையெல்லாங்கொண்டுவந்தார் குருமூர்த்தியாகவந்
அங்கனம்நின்றார்கள் சென்றரசன்றனைவணங்கி
எங்குந்துகளோங்க கெழுமுறசுதானதிர
உம்பர்க்குயரு மொளிமாமதிற்புறத்தில்
செம்பொன்மயமாய்ச் செழும்பரிகள்வந்ததென்று
சொல்லக்கேட்டண்ண லிருதோள்பூரித்தெழுந்து
அல்லலற்றார் தன்மேல் அளவிலாவன்புளனாய
கூட்டிவந்துவஸ்திர முதலியதெல்லாங்கொடுத்து
மாட்டிரல்சேர்மன்னவனும மாதவரைப்பார்த்துரைப்
சோராதசொல்லுடையீர் சொன்னதவணைப்படிக்கு
ஆராலுங்கொள்ளா தரும்பரிகள்வந்ததனை
பார்த்துவருவோ மெனவேபரிந்தவரை
சேர்த்துச்சிவிகைமீ தேறியேதென்னவனும்
மண்டுசெண்டுவெளிபோய் மாதையிடங்கொண்டுவா
தொண்டர்களையாளுகின்ற சூட்சாதிசூட்சமனால்
கொண்டுவருகின்ற குதிரைதனைக்காண
தண்டரளப்பந்தலின்கீழ் தமனியசிம்மாசனத்தில்
இருந்தானிருமருங்கும் யிருந்தாருமறையோர்
கரும்புரசமென்சொற் கவிவாணர்சூழ்ந்துநிற்க
முதுமறையோர்மங்கலச்சொல் முறையாகக்கூறிநிற்
விதுவதனமாதர்பலர் மெனக்கவரியேயவீசக்
கொத்துலவும்ஆம்பன்மலரின் வாசமிகக்கொண்டுவ

தத்திவிளக்கென்றல்வரத் தையலர்கள்பண்பாட
பெச்சுதாளத்தா ரணிந்தேவிரிகடலில்
உச்சிஉதயமதி யொத்திருந்தான்றென்னவனும்
வாதவூரார்தம் மனங்களிப்பச்சந்திரகுலம்
போதவிளங்கஞ்செழுத்தும்வெண்ணீறும்பொலிக
சங்குசின்னம்பேரிகைகள் சத்திக்கபூமியெழும்
எங்கும்பரவயிருங் கடல்வந்துற்றனபோல்
வல்லையுறும்பரிகள் எங்கும்நெருங்கிவர
வில்லேந்தியகரத்து மீனவனும்பார்த்திருந்தான்
அப்போதருமதுரை ஆவணிமாசமதில்
செப்புதிங்கள்மூலம் நாளத்தினந்தனிலே
துங்கமுளநீறும அஞ்செழுத்துஞ்சிறந்துயறச்
சங்கரனார்விட்ட பரிசமுகமுற்றதுவே
உற்றபரிதன்னை ஒழுங்காய்நடத்திவரும்
பொற்புலவர்கோலம் புகலக்கேளம்மானை [ர்
இடுப்பிலுடைவாளுடையோரெழில்கரத்தில்கத்தியுளோ
நெடுநுதலிற்பொட்டுடையோர் நீடொளிபொன்மேனியு
நற்பட்டுடையோர் நற்பவழத்தாருடையோர் [ளோர்
பிறபக்கம்பூபாசிலை பிணிதருகுஞ்சியுளோர்
வல்மொழிக்குரலுடையோர் வபங்குமம்புருக்தூணியு
தன்கரத்தில்வில்லேந்த தருகண்ணுடையவர்கள் [ளோர
பொன்னரியமாலையணிந்தும் பொற்குண்டலந்தரித்தும்
பண்ணிறத்துச்சாத்தணிந்தும்பாங்குளவேல்கைபிடித்து
இத்தகையராகவரும் மிரும்பரிகளதனைக்கும்
மத்தியிலேவேதப் பரியேறிமாலயனும்
கண்டறியாமாயக் கடவுளுமாகபணி
கொண்டநிரக்கச்சிடையிட் கொண்டேயுறவாழும்
பச்சைமுழுநீலமொடு பலவயிரத்தாலணிந்து
உச்சிதமாமங்கியுடன் பட்டாடைதானுடுத்தி
தலைச்சாத்துஞ்சற்குணமும் சாலவொளியின்முகமும்
அலைசேர்கடலுலகில அன்னவனே தன்னிகராய்
கையிற்சவுக்குடனே கனகமயவின்பரியின்
மெய்யினலங்கரித்து மிகவேயளவிலாததுளாய்
இவ்வுலகும்மவ்வுலகும் எவ்வுலகுமேநிறைந்து

அவ்வதுவாய்நின்ற அரன்பரிகளேயுடைய
தானவனைப்போலுமறவோர் தன்னூழியர்போலும்
மீனவனோர்செல்ல விடுத்தார்பரியதனை
மன்னவனுமப்போ வரும்பரியைக்கண்டுகந்து
தன்னுள்மகிழ்ந்து தடங்கண்ணிமையாமல்
பார்த்தனனோர் தநியச்சுசன்பரமனல்லாது
எத்தவெளியிலுள்ளா ரிவராரென்றய்யமுற
அப்போதிருவாத வூரார கமகிழ்ந்து
செப்புவார்முன்னேயான்செய்ததவப்பேறால்
குதிரைகொண்டுநான்முன் குறித்தநாள்தப்பாமல்
ததியில்வந்துகாத்தா ரெனக்கறுத்ததானபரி
வீரரொளியுள்ள வேல்கள்தனைச்சுழற்றி
ஆரவாரிப்பார்கள் அங்கையிலேகததிகொண்டு
விசையுடனசைத்தினிய வேடிக்கைபோல்மறுபொருத்தி
வகையனுகாற்செய்த வகைபலவும்பார்த்தரசன்
கனத்தமுகுந்தின்பமுறக் காட்டும்பரிகள்தனை
ஒன்றாகச்சேர்த்தே யொழுங்காயோர்வீதியிலே
நன்றாகவேநடத்தச் சொன்னுபெனநற்றவத்தோர்
தன்னுளிறங்கித தனிமுதலைச்சென்றடைந்து
முன்னிலறடிவணங்கி முகமிதனைக்கண்ணீருகுத்து
மன்றன்மலரோனும நெடுமாலுமுறுவேறெடுத்து
அனாதிமுதலின்றும் அறியாவருமபொருளே
இடையின்றிவெம்பரியின் மேலேயெழுந்தருளும்
உடையவனேயென்பயந்தீர் தாள்கொண்டவுத்தமனே
வரும்பரிகளெல்லாம் மணிமலவீதியிலே
திரும்பியொழுங்காகச் செலவுரைப்பீரென்றரசன்
சொன்னனெனவுரைக்க சுந்தரருநந்தமரை
மன்னரவெபந்தமுடன் வட்டநெடுவீதியனும்
குதிரைநடைப்பதமெல்லாங் குறிப்பிட்டினிதாக
வதிமுறையதாம்படிக்கு விட்டேதிருப்புமென்றார்
தேவாதிதேவன திருவாக்குணைததவுடன்
மாவாதியெல்லாம அதட்டியொழுங்காக
சேத்துமனவேகமெனச் செல்லவிடுத்தெத்திசையும்
காத்துலகையாளுங் கரியன்முன்வந்துநின்று

வெம்பரிக்கெல்லாந்தலைவன் றன்னைவியந்தரசன்
செம்பொன்சரிகையிட்டத் திருக்கலையுமொன்றழைத்தா
அர்சன்கொடுத்த வருமையுள்ளவஸ்திரத்தை [ன்
பரமன்பரிச்சவுக்கால் எற்றிப்பரியிலிடக்
கண்டரசர்கோமான் கருத்தோடிதுபுகல்வான்
அண்டர்மதிப்புள்ள அரியதுயிலேகொடுக்க
விருப்பஞ்சற்றில்லாமல் மெய்கரத்தால்வாங்காமல்
கொருவமுடனேசவுக்கால் வாங்குகின்றவஸ்திரத்தை
தலையிற்றரியாமல் தன்பெயர்கொண்டாடாமல்
விலைக்குயர்ந்தபரிமேற் கொண்டான்செய்ததென்ன
எவ்வுயிருமெப்பொருளும் எவ்வுலகுமேநிறைந்த
ஒவ்வுதலாங்குன்றவில்லைபொன்றன்னொருமயக்கால்
மனதில்வெகுட்சிகொள் வாதவூராரறிந்து
தனதாய்வந்தாண்ட தனிமுதலையுள்வணங்கி
மன்னுவத்தேசம் வழக்கமதுவாமெனவே
சொன்னார்வழுதிமன துற்றிடுமக்கோபமது
நீத்தும்வரும்பரிகள் லட்சணசிறப்புவரைச்
சேர்த்தழைத்துநன்றாய் தெறிந்துரைப்பீரென்றுரைக்க
அரசனுரைகொண்டருளும் அப்பரிகள்லட்சணத்தை
விரசாகப்பார்த்தறிந்து வேந்தனுடமேதுரைப்பார்
துன்பந்தருகின்ற சுழிகளெதுவாகுமென்றால்
இன்பமில்லாச்சந்திரசுழி பேற்குமண்டவாதச்சுழி
உடலிலொருபக்கத் தொருசுழியேகைவ்வகமும்
விடமென்னுங்காகவர்த்த முன்வளையமேன்மையிலார்
கேதாரிகாலிற் கிளர்சுழிகச்சைநிலையில்
தோதாகப்பட்டைச்சுழி கேசாவத்தச்சுழி
கொம்பென்னநீள்செவியுங் கூர்முருக்கியகாதும் [போல்
இன்பமிலாக்கருங்காலொன்றுவெங்காலொன்றுமின்றூ
வெண்கண்ணும்நீலகண்ட மேவும்பெரியபீசம்
றன்பீசந்தினிகுன்றல் றவல்முகம்வால்நாற்காலி
செப்புசுழியின்மை தின்கழுத்தடியதனில்
ஒப்பில்மார்க்கண்டமிரட்டை யொழுங்காகவேவின்மை
நெத்தியிலேரெண்டுசுழி நேரானநாபியதில்
செற்றலாநான்குசுழி செம்மார்பில்ரெண்டுசுழி

உட்கட்டிலோர்சுழியும் ஒன்சிரசிலோர்சுழியும்
தள்ளுமியவில்லாத் தனிப்பரிகள்சப்தமதி
நரிகுருகுபன்றிபேய் நாய்பூனைவந்துடனே
கரியநிறக்காக்கையெனுஞ் சப்தமதுகாணுதாய்
கடல்மேகஞ்சங்கம் காகுளிகள் துடனே
இடபமெனுஞ்சப்தம் யிடையனலாயிதிருக்க
ஒறுக்கும்புலிகரடி யோரிசென்னுய்பூனையுடன்
கறுத்திடுங்காகம்புகை தீயென்னநிறங்காட்டிலதாய்
பொன்னுடனேவெண்டாளம் நீலமணிபொற்கமலம்
தன்னதுவேயொப்பின்மை சார்மேலுதடுடனே
மன்னுபற்கள்ஒத்துளதாய் வாசமுளதாய்நாவும்
மாந்தளிரேயொத்திருகண் மயிர்திரட்சியுள்ளனவாம்
சேர்ந்தஉக்கிரபார்வையதாய் தேகபுட்டியில்லாதாய்
உள்வளைதலுற்றனவாய் யொளிர்முகமும்கோணமதாய்
அள்கழுத்தும்மின்சிரசும் அரியமயிரோர்நிறமாய்
மார்புங்கண்டமுஞ்சேர்ந்துவன்பாம்படத்தையொற்றல்
ஆர்ப்பதுசங்கின்ஒலிபோல் அழுத்தமுளவன்குளம்பு
மண்டலமேசெய்வனவும் மாமிசத்தால்தன்னரம்பை [ம்
தொண்டுமுடினெளிப்பாய்க்கொள் திரண்டவன்றொடை
யும், தண்டைக்கால்நீண்டனவும் தனிநிறத்தைக்கொண்
டனவும், வண்டையங்களிட்டிருகால் நாலுமெழில்வா
லும், சீரானநெற்றியுடன் சேர்ந்துவெழுத்தபரிகள்
ஆராலுஞ்சொல்ல அரியபஞ்சகல்யாணி
விண்டலமுந்தாவும் மிகுநீரிலுந்தாவும்
கொண்டலெனமதிக்கும் கோதில்பரிகள்தன்பேர்
மங்காளன்சாரங்கன் மாகங்காளீலனென்றும்
கொங்காளன்சன்னசம்பான் குங்குமச்சேரன்கரியான்
மொரவழகன்சாரனென்றும் நன்னீலன்றன்னுடனே
தெவ்வச்சுரஞ்சிவந்தான் திருவிளங்குமன்னனெனும்
கருங்காரிச்சம்பான்பொல்லான் களகநல்லானென்றுய
பெருநூல்தன்னுள்ளே பேசுஞ்சுழிகள்பொருந்தி [ரும்
நிறமுங்குணமும் நிரைந்தபரிகளனைத்தும்
அரனும்நலனும் அதிஷ்டவழியாகவந்து [ள்
தென்னவெண்ணங்கொண்டே மிறைவனெனவந்தவர்ச

மன்னவன்றன்பாதம் வணங்கிஎழுந்துநின்றார்
அப்போதரசன் யகமகிழ்ந்தேயண்டமெல்லாம்
ஒப்பதான்தந்த உயர்பரிகளத்தனையும்
பார்த்துவிலைமதிக்கப் பாங்குடன்முன்னேகொடுத்த
மாத்திலாச்செம்பொன் அதற்கெண்மடங்கதிக
பொன்கணக்கைப்பார்த் துடலம்பூரித்துானந்தமொடு
தன்மனதுக்கேற்றபரி தானேகிடைத்ததென்று
வந்தபரிகளுக்கு தலைவன்மலர்முகத்தை
அந்தமுடன்பார்த்தே யரைவானரசர்பிரான்
செவ்வையாய்நின்றே திருக்கயிறுமாறுமெனப்
பவ்வமகற்றரனும் பரிகளெல்லாமின்றுனது
நற்பொன்னெனதுபரி நாளையெவ்வாறானாலும்
மற்புயத்தாயுன்றனக்கும் எனக்கும்வழக்குயில்லை
என்றேயரனுரிது வுரைக்கவேயரசன்
நன்றுமெனவே நயப்புற்றிதுவிரைவாய்
செப்புவான்றன்கருமம் செய்வோர்தனைப்பார்த்து
இப்பரியெல்லாங் கயிறுமாறியிலாயத்திலே
கட்டுமெனக்கயிறு மாறிக்ககனமதை
முட்டும்பரிப்பந்தியில் முந்தாமல்பிந்தாமல்
நிரைநிரையாய்க்கட்டினபின்னேயமுளவெம்பெருமான்
புரையிலாமன்னமைச்சும் பார்க்கப்புடைபோந்து
பண்டையுருக்கொண்டமரர் பக்கத்திறைஞ்சிவர
கொண்டல்நிகர்கண்டர் திருக்கோயில்புகுந்தேயிருந்தார்
சங்கரனார்செல்லநிம்பத் தாரணிந்தோனுளமகிழ்ந்து
அங்கம்பூரித்தே யமைச்சர்தனையழைத்து
இருபிறப்பாளர்மனதுக் கின்பமுரச்சந்திரனில்
மருவுகந்தவெண்டரள மாலைகொடுத்தேயனுப்பி
பருவமத்தயானை படையோன்பகல்வனவான்
வருமத்திரோரத் தெழுந்துமனைபுகுந்தார்
ஏனைமந்திரர்தமது சிறப்புகவியன்கொள
மானகராருந்தன் மனைபுகுந்தாராகவிப்பால்
நெருங்குபல்லியமதிர நெருஞ்சேனைசுற்றிவர
மருங்கிலாப்பெண்களெதிர் வந்துமங்கலமேந்த
அரங்கொள்வேலானழித்த வணிவரிசையோடணைந்து

புரங்கொள்வானன்பர் புகுந்தார் திருமனையில்
அன்றுபகலிலோன் அகலஇராவதனில்
குன்றுவில்லையோனருளால் குதிரைகளெல்லாம்நரியாய்
உருவெடுத்தொருங்குகின்றே யூளையிட்டுஅம்மதுரை
திருநகரத்தாரெல்லாம திடுக்கிட்டெழுந்திடவும்
முன்னிருந்தவெம்பரிகள் தன்னைமுறுவலுற
உன்னக்கடித்தே யுதிரந்தனைக்குடித்து
குடல்கள்தனைப்பிடுங்கித் தின்னுங்கொழுப்பதனை
கடவாயில்மென்றுருசிக் காணுஞ்சிலபரியை
பீசத்திலக்கேள்விப் பிடிக்குஞ்சிலபரியை
கூச்சலிட்டுப்பின்வெருட்டிக் கொல்லுஞ்சிலபரியை
இந்தவிதமாக விரும்பரிகளைத்தொலைத்து
அந்தகனேவந்தனென்ப தாகநரித்திரள்கள்
கூடிக்கொண்டேகமதாய்க் கூச்சலிடக்காவலர்கள்
நாடிவிழித்தன்னரிகள் அதனையேவிரட்ட
முட்கோட்டையேறிக் குதிக்குமுரணொடுக்கி
இட்கட்டான்சாளரத்தி னேருஞ்சருங்கைவிழி
ஓடுஞ்சிலநரிகள் ஓடவழிகாணமல்
வாடுஞ்சிலநரிகள்கோ டடவரண்மேற்குதித்து
ஏகும்நரித்திரள்கள் காவலருக்கெட்டாமல்
போகும்வெருட்டுவரை பின்றொடர்ந்துபொல்லாத
சிங்கம்போலார்த்துக் கடிக்கச்சினந்தெழும்பும்
மங்கவர்கள்காண தகலுமணிமதுரை
வீதியிலும்பூமகள்கள் வீடுந்தபோதனர்கள்
கோதில்மடமும் குளிர்பொழிலும்பூங்காவும்
அறுசமையத்தவர்களுக் கன்னமிடுஞ்சத்திரமும்
மறுவத்தொளிர்செந்தாமரை மரைமலராம்வாவிகளும்
கந்துகம்போல்வந்தகலைக் காகாவன்னரிகள்
வந்துநிறைந்ததுகாண் வகைதுகையிலாததுவாய்
சங்கின்றொனியும் தனிப்பேரிகைத்தொனியும்
மங்கலச்சொல்வாணர் வரித்தொனியுங்கோடுடைய
பரித்தகரியின்றொனியும் பாய்பரிகளின்றொனியும்
விருத்தியுளவன்னகர மெல்லாம்நரித்தொனியே
பாகவிழித்தார்கள் அம்மதுரைமன்னவர்கள்

நாகமலைபொத்தரி யேவிழிக்கநற்பரிகள்
விழிக்கக்கலைவிழிக்க விடபமெலார்தான்விழிக்க
செழியன்பாட்டொலிவிழிக்க திருப்பன்றிகள்விழிக்க
வண்டிக்கடாக்கள்விழிக்க வடிபாலுடையமுலைத்
திண்டெருமைகள்விழிக்கச் செஞ்சேவல்கள்விழிக்க
காக்கைவிழிக்க கனகமயிலைவிழிக்க
நாட்கமலச்சேக்கைபதில் நன்லுமங்கலம்விழிக்க
மாடப்புருக்கள்விழிக்க வர்ணக்குயில்விளிக்க
மேடங்களெல்லாம்விழித்துவெம்போர்கள்செய்துநிற்க
அந்தகாலத்தி லவனியெல்லாந்தானழிக்க
முந்துகடலுங்காத்து மன்றுமுனிந்தேகியபோல்
சத்தமெனக்கண்டதனி நகரத்துள்ளவர்கள்
சித்தங்கலங்கி திகைத்திதனைச்செப்பலுற்றார்
நம்முலகமந்தணர்கள் செய்தவங்கள்நன்கிலதோ
அம்மரசன்செங்கோல் அதுகொடியதானதுவோ
தன்மம்குறைந்ததுவோ சத்தியர்தவறினதோ
நன்மைதரும்பாண்டி நாடன்றனக்குறுதி
யுன்னதிருவாதவூ ராளியுளங்களிக்க
தென்னுபரிகள்நரியாய்ச் சென்றதென்னகாரணமோ
என்றுதிருநகரத்தா ரெல்லாருமேக்கமுற
சென்றாக்கஞ்செய்து திரள்நரிகளோடிடவே
அப்போதிராவகல அன்றேயளவிறந்த
ஒப்பிலொளிபெருக்கி யோங்காதரமுவந்து
நேற்றுச்சிவனார் நெடியவனத்தோரியெல்லாம்
சேர்த்துத்திருப்பரியாய் செய்தவிளையாட்டல்கண்டோம்
இன்றைக்குமண்சுமக்கப் பார்ப்போமென்னாசையுடன்
சென்றுவருபவன்போல்செங்கதிரோனன்றெழுந்தான்
அவ்வுதையம்நாடி யரசன்துயிலெழுந்து
செவ்வையுளமந்திரிமார் சென்றிருக்கவின்முகில்போல்
கொடுக்குந்திருக்கரத்தான் கொலுவிற்றிருக்கயெதிர்
அடுத்துப்பரிக்காவலர்கள் அங்கோடியேவந்து
மன்னர்க்குமன்னு மலர்மகள்வாழ்திண்புயத்தான்
நன்னயமாய்நேற்றுவந்த பரிகளெல்லாம்நரியாய்
முன்னுளிருந்தபரியை முற்றுமுயிர்சிதைத்து

தன்னுயிரத்தமது தானறுந்தும்போதுகண்டு
அடிக்கத்தொடர்ந்துபெங்கள் அங்கமெல்லாம்புண்ணாக
கடித்துப்புலிச்சேட்டைக் காட்டிக்கால்வேகமதாய்
ஓட்டம்பிடித்துக்கா டுற்றதெனவேயுரைக்க
கேட்டுச்சினந்திடியின் கொர்ச்சனைபோலேநகைத்து
மன்னவனுமுன்னிருந்த மந்திரிகளைப்பார்த்து
என்னகாணிப்மோசம் செய்தவனையென்செயலாம்
சொல்லுங்களென்றமைச்சர் தோன்றல்பதம்பணிந்து
செல்வமிகுபூபாவுன் திருவுளத்துக்கேற்றபடி
பொல்லாதவனென்றொருபேர் பூண்டானதுதவிர
வல்லோனேயெங்கள் மரபெல்லாமாசுபடச்
செய்தானெனவார்த்தை செப்பார்சிறந்தாக்கிக்
கைதவனைப்பாரா திருந்தார்பின்காலருந்
தண்கமலக்கண்ணிலனல் தான்கதுவமெய்வேர்ப்ப
திங்கள்குலமன்னன் சினந்தபுலிபோலிருந்தான்
அப்போதிருவாத வூராரகமகிழ்ந்து
ஒப்பில்பரிநேற்றழித்து ஊக்கவலைதீர்ந்தோமென
மதிமந்திரிக்குள்ள வலங்காரமும்புனைந்து
கதிகொடுப்பான்பொற்றாள் கருத்தோடிருத்தியன்று
யோகிபரசனிருக் கைக்குவந்தார்வந்தவுடன்
போகிதனைச்செயித்த பூபாலன்தான்பார்த்து
சொல்வானுரும்பேரும் ஒன்றுமறியாமல்
நல்லவனெனமுன்னியன்றே நல்லமைச்சுதானழித்து
கண்ணேயிமைகாற்பதுபோல் கார்த்தேனிதுவரையும்
எண்ணமதைக்காட்டா திருந்தாய்மிகச்சிறந்த
வேதகுலத்திற்பிறந்தும் வேதநூலைத்தெரிந்தும்
பாதகத்தையாரால் பழக்கமிகுமுன்றனையான்
நற்றவத்தோனென்றுவெகு நன்குமதிக்குமெனக்கும்
கற்றவித்தையெல்லாம் கசடறக்காட்டிப்பசுத்தோல்
போர்த்தியடுபுலியின்செய்கை பூண்டாயதுமிகவும்
நேத்தியதாக்காணும் நெடுநாளபழக்கமுற்றும்
கைதவனென்னுமறக் கணக்கில்லாப்பொன்கொடுத்து
செய்யபரிகொண்டுவரச் செல்லவிடுத்தவெனது
கனத்ததிரவியம்நின் கைதொண்டிரப்பவர்க்கென்

தனத்தைக்கொடுத்தின் றடங்காட்டினேரியெல்லாம்
சேர்த்துப்பரியாக்கிச் செவ்வையுடன்கொண்டுவந்து
நேர்த்தியுடன் தந்தபரி நேர்மையுள்ளமுன்பரியை
கொன்றுதிரந்தன்னைக் குடித்துச்சினந்தெழுந்து
சென்றாரார்தன்னைச் சிதைத்துவனத்தேபுகுதல்
கெய்தும்படிசெய்தவுனக் கேற்பனசெய்வேனுதி
சைவனெனவும்பெருமை கொண்டாய்தன்மையினுல்
தப்பினுயென்றுதண்டக் காரர்தனையன்றழைத்து
இப்பிரட்டன்றன்னை யிழுத்தோடியேகொடிய
வெய்யிலில்நிறுத்தியும் மிகுந்திரவியமுஞ்சாடாய்
கையில்வாங்கென்றான் காவலர்கள்மேலவரை
கொண்டேகித்தீபோல் கொதிக்கின்றவெய்யிலதில்
அண்டரெல்லாங்கண்டே யழநிறுத்தித்தண்டலர்கள்
என்னவகைசொல்லென் றியம்பவும்புண்ணாகி
பன்னரவம்பூண்ட பாக்கியனைத்தானினைந்து
செப்புவார்முன்னிருவர் தேடறியதானவனே
எப்புவியுமெப்பொருளும் எவ்வுயிற்குமானவனே
திருநேத்திரமுடையாய் செங்கரத்தில்மானுடையாய்
அருமையுள்ளபொற்பரிகள் அவ்விரவிலேநரியாய்
போனதுவாமென்றே புலிபோலச்சினந்தரசன்
மானமுளராகுமிந்த வன்காவலரைவிட்டு
வருத்தந்துயரதனை மாற்றாதிருந்தீரால்
கருத்தறியாவென்னையினிக் காத்தளிப்பாராரெனவே
வாடுவார்சிந்தை வணங்கியென்னையாண்டதெய்வம்
தேடுமோதேடா திருக்குமோதேவர்தமைக்
காற்கவேயாலமுண்ட கடவுளெனக்கிரங்கி
பார்க்காதிருக்குமந்தப் பண்பதுவுமேயறியேன்
குதிரைகொள்ளக்கொடுத்த கொற்றவன்றன்பொன்னு
மதியுங்கைக்கொண்டமத் தேவனேகாருண்மையா
என்றவிருபிறப்பாளர்க கிரங்கியேயெர்தையரும்
துன்றுமுடிமீதிருக்கும் சுத்தமுள்ளகங்கைதனை
வாவென்றழைத்தவனின் வைகைநதியோடெழும்பி
கோவெலாமூடவுறங் கொண்டெழுந்தமரர்தொழும்
வாதவூரான்தன் மனக்கவலைதீர்ப்பையென

சீதமதிசூடித் திருவாய்மலர்ந்துரைக்க
தெய்வகங்கைகேட்டானார் திவ்வியநற்றாள்பணிந்து
சைவநெறியேபெருகும் தன்மையைப்போலேபெருகி
வைகையிருகரையில் மட்டுமோவெவ்வகையாம
பொய்கைகளும்நந்தவனம் தோப்பும்பண்ணைகளும்
சேரத்திரண்டுவைகை சென்றிறுத்திக்கொண்டெழும்பி
ஆலமேனாம் அழவிலாதேவரவை
கண்டோரெல்லாம் கலங்கிமனம்பதறி [ம்
பண்டைநாளின்றுமுதற் பார்த்தறியோங்கேட்டறியோ
என்றேயரசனிடத் துரைக்கக்கேட்டெழுந்து
நன்றாயமைச்சருடன் நாடிவைகையைப்பார்த்து
கைகூப்பிபொன்னுமுத்தும் கனத்தமணிப்பூந்துகிலும்
சையோகமாம்வைகைத் தண்ணீரிற்போட்டுரைப்பா
தக்கப்புவியுள்ளோர் தனக்குயிராமென்னுமன்னே [ன்
இக்கோபந்தீரென் றிரைஞ்சிவணங்கின்றான்
அப்போதுகங்கை யதிகமாயோங்கிடவே
தப்புரையாங்கண்டமைச்சர் தன்னோடிதுபுகல்வான்
தீய்வெல்லாம்போக்குஞ் சிவனாரிடப்பாகம்
மேயமீனாட்சியம்மன் என்றிடுமென்றாயருக்கு
சிறப்பாகும்பூஜை முன்னிற்றுறைசெய்ததுண்டோ
பிறப்பகற்றுமேலவர்க்கு பிசகேதுவுஞ்செய்ததுண்டோ
வேதாகமத்தின் விதிப்படிசெய்வேள்வியதில்
தீதாய்வந்துற்ற செயலெதுவோவன்றிநான்
என்முன்னோர்தம்மால் இயற்றியதோர்தன்மமதை
செம்மையுளதாகவின்று செய்யாதிருந்ததுவோ
தேபக்குடிபகுதிச் சென்றதைதப்பின்வாங்கியதென்
மாயமோவெந்த வகையெனச்சொல்வீரெனவே
தென்னவனுமீதுரைக்கச் சீரமைச்சரோதுரைப்பார்
அன்னவஸ்திரங்கொடுத்து யாதரிக்குமரசரோ
விளங்குந்தணிசென்னி வித்தகன்மேற்பத்தியனே
உள்மகிழச்செய்தாலின் றோங்குபுனல்நீங்குமென
என்னெண்ணம்போலே யிசைத்தீரென்றேயரசன்
நன்னயமாய்வார்த்தை நவின்றுசிறுதூதர்களாய்
தன்னவனுக்கடிமை தானானவேதியனே

அழைத்துவரச்சொல்ல அரனடியாரைக்குறுகி
குழைத்தமனத்தோரடுத்து கும்பிட்டங்கேதுசொல்வார்
மாணிலமெலாம்புகழும் மன்னழைத்தார்வாருமென
வேணிற்குரியனிகர் வேதவருமங்குவந்தார்
வந்தபத்தியுள்ளவரை மண்டலமெலாம்புகழும்
கந்தனேரென்னுமிளங் காவலனுமேதுசொல்வான்
ஒப்பற்றசர்ப்பா பரனடியார்க்குவப்ப
செப்பமதாய்க்கொடுத்த செம்பொன்னெனதானால்
தன்மப்பிரற்குண்டோவத் தன்மையறியாமலுமக்
கின்னல்செய்வதானவெனக் கேற்றவிலாமையினால்
செய்தபிழையெல்லாம் பொறுத்தேசிவானுபவத்
தையாவென்மீதில் அதிகத்தயவுசெய்து
கிருபைசெய்வாய்கண்டாட் கிட்டெழும்புமோர்கடல்
பெருகிவரும்வைகை பெருநதியூர்கொள்ளாமல் [போல்
அடைத்துக்காப்பீரென் றலைகடல்போற்சேனை
படைக்கஞ்சாவீரன் பரிதாபமாயுரைக்க
வாதவூரார்தம் மனவெறுப்பொடுவிருப்பும்
போதவிலாக்கங்கைப் பொருந்துசடையோன்பதத்தை
மனதில்நினைத்தார் வைகையூர்கொள்ளாமல்
சினமடங்கித்தன்செய் திருவுளங்களிந்துருகி
வேண்டுதலுக்கிறங்கி மெல்லவேசெல்லவையன்
ஈண்டதுடனவ்விடம்விட் டேகித்திருப்பொலிந்து
வைகைக்கரையில்வந்து வாதவூரெங்கோனும்
செய்வனவெலாமுறையே செய்தடைக்கவேணுமென்று
முறைமுறைமுன்னின்றதிருத் தூதர்முகத்தைப்பார்த்
துறைதிரைவாரவைகை யடைத்திடவேணுமதற்கு [அ
கம்மூர்ச்சனங்களெல்லாம் நாடிவரவேணுமென்று
செம்முரசறைந்துவரச் செய்வீரெனப்புகல
தூதர்களோடித் துருசாய்ப்பறைசாத்த
பேதமிலூராராழில் கூடையுமண்கொட்டும்
கொண்டுதிருவைகைக் கரைமேற்குலவையிட்டு
அண்டர்பெருமான் அரனடியார்பால்வந்தடைந்தார்
வந்தவர்கள்தன்னை மதித்தேதுகைசேர்த்து
அந்தமுடனோர்குடிக் கரைக்கோவளந்திதனை

சீக்கிரமாயடைத்தல் செய்வீரெனப்புகல
பாக்கியமாமென்றே பரிந்தடைப்பாரானார்கள்
துங்கமுளசங்குமுத்தும் தும்பிமுத்துமூங்கிமுத்தும்
செங்கரும்புமுத்துமள்ளிச் சேர்ப்பார்கரையாக
அக்கரையைத்தள்ளி யடர்ந்துபுனலோங்கிடவே
சிக்கெனவேநற்றளையைத் தேடிக்கொணர்வாரும்
பரிநிறுத்துமென்பாரும் பலகையுண்டோவென்பாரும்
சரியிதுமன்னெனன்பாரும் சல்தியில்வாவென்பாரும்
பத்தைவெட்டுமென்பாரும் பலகையுண்டோவென்பாரு
செத்தைகளைத்தள்ளியதிற் றிண்கூடைபெய்வாரும் [ம்
நிரைப்படுமகிலாரந் தன்னைநிரந்தரமாய்
கரைப்படுத்திவைகையனைக் கட்டுவாருகிநிற்க
அப்போதிரிநேத்திர முடையார்க்கன்புமிக்காள்
ஒப்பற்றமாதவங்கள் உற்றமனச்செல்வி
என்னும்பெயர்கொண்ட விருநரைமூதாட்டியவள்
தன்னுணவுக்காய்பிட் டதனைவிலைச்செய்துமிச்சம்
கொண்டுசுகசீவனஞ்செய் கோதைபங்கடையாது
கண்டரசர்தூதர் கடுகவெனக்கிங்குவந்து
பிட்டதனைக்கூலிகொண்டென் பிரிவுகரையையடைக்க
இஷ்டமுளவோர்கூலி யாளெனக்கில்லையென்ற
சென்றேகிமாலயனுந் தேடியென்றுங்காணாத
குன்றுவில்லிகோவில்வந்து கும்பிட்டிறைஞ்சிநின்று
சொல்லுவாள்நீலகண்ட சுந்தராவந்தமுள
எல்லையிலாவிமதி யென்னுமிருநயனங்
கொண்டுலகோர்செய்கையுள தெல்லாங்குறிப்பாகக்
கண்டறிவோயென்றுயரங் காணாதவாரேதோ
ஆருடனான்சொல்வேன் அடியார்க்கெளியனெனும்
பேருடையோனென்றுன்னை பேசுநூல்பொய்யதுவோ
தாய்தந்தையில்லை தமருமில்லையான்றனியாள்
வேயின்றமுத்தேயென் வேண்டுதலுக்கின்றிரங்கி
அருளக்கண்பார்த்தெந்தன் அவதியதுதீராயோ
இருக்காதிறப்பேனான் என்றிபம்பவன்றேதான்
காலன்மார்க்கண்டன்முன் கண்டவுடனேயழைக்க
சீலமுடன்வந்தாண்ட செய்கைபோலின்னளவில்

கிழிந்ததுணியும் கிளர்தோளில்மண்கொட்டும்
வழிந்தொழுகுகொன்றை மலர்முடிமேற்கூடையுடன்
மேவியெனையேவல்கொள்வா ருண்டோவெனக்கூறி
கோவில்முன்னேநின்றதிருக்கோதையருங்காணவந்தார்
அந்தமொழிகேட்டுலகத் தன்னைமனமகிழ்ந்து
மைந்தவெனக்கிங்காளாய் வாவென்றுரைத்திடவே
சொல்லுவார்கூலி முன்னே தோதாககொடுத்தாயேல்
நல்லகரைசெய்பவின்று நானிசைவேனென்றுரைக்க
அப்போதென்னனையரும் ஆதரவாயேதுரைப்பாள்
ஒப்பிலாமைந்தா உனக்கருந்தபிட்டளிப்பேன்
தின்றுகொண்டுபோயென்றிகழ்கரையைத்தானடைத்து
நன்றாகவந்துவந்து நற்கூலிகொள்வையெனக் [ல்
கேட்டிறைவன்சொல்வான் கெடுதலிலாப்பிட்டளித்தா
நாட்டுமுனதுகரை நானடைப்பேனென்லுரைக்க
அருந்தவத்தால்கேட்டினிதா யழித்திடும்பிட்டதனை
கருந்துணியாவேற்றுக் கடவுளருந்தியபின்
என்பசியைத்தீர்த்தா யினியுன்கரையதனை
நன்குறவேசென்றடைப்பேன் நற்றாயேபின்றழித்த
பிட்டுகன்றின்னம்வெகு பிட்டளிக்கவேண்டுமென
அட்டுத்துணியேற்றது நிறையவாங்கிபகை
தின்றலைநீர்வைகைச் செழுங்கடையிற்சென்றுவந்து
குன்றனையமாதவத்தீர் கூதரைக்காட்டுகென்று
அப்பனுரைத்திடவே யன்னையருமேதுசொல்வாள்
செய்யகரைநெட்டிற் சிறக்கவெனக்கிவ்வாக
வந்தபங்கிதனையெந்தன் மைந்தனேதந்திரமாய்
முந்தல்பிந்தலில்லாமல் முற்றுமடைப்பாயெனவே
தவக்குன்றுமன்னுள் தனியகத்துக்கேகியபின்
சிவக்கொழுந்தானந்தர் திருக்கரத்தால்கொட்டெடுத்து
வெட்டுவார்கூடையில் மண்மேற்பிறைமுடியில்
கட்டுவார்சும்மாடு மேற்கூடைக்கட்டுகந்து
நடப்பாரமுர்தவைகை நதிக்கரையிலேசொரிந்து
கடல்போலதிர்ந்துவரும் கங்கையைபார்ப்பார்வருவார்
வேர்ப்பாரிளைப்பாரம்மன் பிட்டின்றன்னையுருசி [ர்
பார்ப்பாரவ்வன்னைதன்மேற்பரிந்தினியபார்வைசெய்வா

பிட்டிவரியதென்று பிறைசேர்முடியசைப்பார் [வார்
கொட்டுடன்கூடைதனைக் கொண்டுநின்றேயாடல்செய்
மண்வெட்டிக்குப்பல்செய்வார் வாரியம்மண்ணைக்கொடு
நுண்கரையிற்பெய்வார் நுவலரியவேலையினால் [போய்
காலோய்ந்தார்போலக் கரைமீதிருந்திடுவார்
சால்பாயெழுந்தவர்பின் றாண்டுவார்நீண்டோடுவார்
சிக்கெனவேமீளத் திரும்புவாரங்கைதட்டி
கெக்கலிப்பார்நின்றவரைக் கிட்டியணைத்தேதழுவி
கட்டியணைப்பார் காவலர்தன் தூதர்வந்து
அட்டிசெய்யாதேயென் றடிக்கக்கரமெடுத்து
கெஞ்சிப்பயந்தவர்போல் கிளர்கூடைமண்ணதனை
மஞ்சுபொருந்திலகும் வைகையணைமீதுபெய்வார்
மண்ணொட்டுங்கூடை தட்டுவார்போல்கூடைதனை
விண்படும்மாற்றிற் றவரிவிழுந்தோடுவர்போல்
போட்டுக்கூடையெடுக்கப் பொன்னாற்றிலேகுதித்து
நாட்டஞ்சொல்லாதேகி நயமுடனக்கூடைதள்ளி
எடுத்துக்கரையேறி ஈரம்போக்கியதனில்
தொடுத்தகட்டவிழ்த்ததனை துன்னியகொட்டுமண்ணை
கொண்டுபோய்வெற்றுப்பங்கில் கோட்டதனுடைப்பட
கண்டார்த்துத்திண்புயத்தைத் தட்டிக்கவலையிலா
அண்டர்பெருமான் அகமகிழ்ந்தின்றாடல்செய்ய
மண்டுநரைமூதாட்டி வந்துசலித்தேதுசொல்வான்
ஆருமில்லாப்பாவியெனக் காதரவாய்வந்தகந்து
சீர்பருகும்நம்பியென் செய்யபங்கடையாமல்
கோலாகலமாய்க் குதித்துவிளையாடுவதை
சீலமிகுமன்னன் றால்தூதர்கண்டாக்கால்
வைவார்கண்டிப்பார் மகனேயிதற்கென்ன
செய்வேனென் றாளவன்மேற் சிவனார்தயைகூர்ந்து
பெற்றதாய்போலென் பெரும்பசிதீர்த்தென்னுடைய
சுற்றம்போலிங்குலவு சுந்தரியுன்பங்குதனை
கண்டராசர்கோமான் கனமகிட்சிதானடையப்
பண்டைக்கிரட்டிப் பண்பாய்க்கரையடைப்பேன்
சந்தேகமில்லாமல் தாயேநடந்திடெனச்
சுந்தரனார்சொல்லநல்லத் தூயமனத்தாளகத்தே

போயினாளென்றே புரந்தரன்மண்கொட்டெடுத்து
வாயகன்றகூடையில் மண்வாரிப்படபடப்பாய்
ஓடுவார்கூடையைப்போட் டுனாக்காங்கெழுந்திருப்பார்
நீடுவார்தன்கரையை நேர்பார்த்தளர்ந்துசரி [ம்
ஆச்சுதுபாரென்பார் அவ்வனைப்பிட்டளித்ததெல்லா
மோச்சுபசியாச்சுதென்ன பொல்லாப்புவந்தாலும்
எம்மால்முடியாதென் றெழுந்துகொண்டணைதிலே
வெம்மாசில்கூடையதை மின்புறத்துக்கேஅணையாய்
வைத்துதுயின்றார் மன்னுயிரெலாம்பயின்றார்
சித்துவிளையாடலெல்லாஞ் செய்யவல்லகாலமதில்
அப்போதெழில்சேர ரடலமாண்டியனுசன்
ஒப்பிலாவைகையுடைப் படைத்ததன்மைதனை
பார்த்துவருவோமெனப் பண்டமைச்சரோடும்
ஆர்த்துப்புனலோங்கும் மழகியவைகையடுத்து
எடுத்தகரையெல்லாம் யிறைமகன்பார்த்துள்ளுவகை
மடுத்தவந்திபங்கதனை வந்துபார்த்தேதுசொல்வான்
இப்பங்கடைப்பா னெவனவனெங்குற்றனெனச்
செப்பமுளகாவலர்கள் தென்னவனார்க்கேதுரைப்பார்
தமிழ்நாட்டதிபா தரணிமன்னவரின்முதல்வா
அமிழ்தினுடன்பிறந்த அம்புலியின்தன்குலத்தோய்
பிட்டுவிற்றுண்ணும் பெரியநரையாளவந்திக் [து
கிட்டபங்கடைத்தல்செய்வே னென்றொருவனிங்குவந்
என்பேர்பதிந்துகொள்ளு மென்றவனிங்குற்றவகை
தன்பாலடைந்தின் றடங்கரையையடைப்பான்போல்
கொட்டெடுத்துவெட்டியொருகூடையிற்றாக்கிக்கொண
மட்டடங்காவெள்ளமதிற்சொரிந்துமீண்டவனுப் [ர்த்து
ஆடுவான்பாடல்செய்வான் ஆகாவெனச்சிரிப்பான்
ஓடுவானோடவன் றுடன்றிரும்பியிங்குவந்து [ன்
கண்டவரைவாங்கவென்பான் கைதட்டியோடுமென்பா
மண்டுபுனல்போச்சுதுங்கள் வாழ்மனையதேகுமென்பா
வாவென்றாற்போவானீ போவென்றால்வந்திடுவான் [ன்
ஆவென்றழுவான் அயர்ந்தவன்போற்கீழ்விழுவான்
பின்னுமெழுந்தோடிப் பிலமாய்மண்வெட்டியங்கே
பன்னப்பிடித்துவெட்டிப் பாங்குளக்கூடைபெய்து

தூக்குவான்பாரமெத்த தோணுதென்னபாதிமண்ணைப்
போக்கிப்பின் தூக்கிவரும் பொன்னுற்றிலேசோரிவான்
அடைபட்டதென்றே யகமகிழ்வனண்டமதில்
தடைபட்டினியோங்காத் தன்மலராக்கொன்னறமர
நீளலிலேமாறுத நித்திரைகொள்கின்றேனென
சோழன் றனைவென்றேன் தூதர்மளைப்பார்த்துரைப்பான்
அந்தமிகுந்த அணையடைத்தல்செய்யாத
மந்தன் றனைநேர் வரவழைப்பீரென் றுரைக்க
தூதர்களோடி துளிர்நிறைந்தகொன்றைமரத்
தேதமற்றநீள லினிதியங்குமேலவனைத்
தட்டினானன்றே தனிமுதல்வன்றான்விழித்து
மட்டில்லாப்பயந்தவ ரெனக்கைகால்நடுங்கி
யெழுந்துநின்றார்தம்மை யிழுத்தோடிக்கொண்டுவந்து
செழுங்கமலத்தாள் வசிக்குந்தென்னவன்முன்விட்டார்
பார்த்தரசர்கோமான் பழிசொல்புலிபோற்சினந்து
மாத்துயர்ந்தசெம்பொன் மயங்கொள்பிரம்பெடுத்து
ஆதியந்தமில்லா தரும்பொருளுமாகியெங்குஞ்
சோதிமயமான சுந்தரனார்தன்முதுகில்
வீசியடித்தானவ் வேதியனாரங்கமது
கூசிமறைந்தார் கோவுலகெலாம்நிறைந்தார்
ஆதிபகவன்மேல் அடிபட்டதுஞான
நீதிமுகில்மேலும்வன் னேரிழையார்தன்மேலும்
பதிமந்திரிகள்மேலும் மலைந்துபொருவார்மேலும்
சதிதவறுதமடவார் தன்மேலுமாடவர்கள்
மேலுமயன்மேலுமான் மேலுமிந்திரன்மேலும்
மாலதனைவெல்லும் மறவோர்மேல்மதிமேலும்
பகலவன்றன்மேலும் மலைமேலும்பாற்றுங்கும்
சகமேலமரர்மேலுந் தன்கடலின்றன்மேலும்
மாதவத்தாராகு திருவாதவூரார்மேலும்
போதவடிபட்டேமெய்ப் புண்ணாகியண்ணலடி
பட்டாரோவென்பாடு பட்டாரோவென்றுருகி
மட்டாருந்தாரார் மயங்கியழுதேதுரைப்பார்
வெய்யனுமென்பவத்தை வேரறுத்தாள்கொண்டமுதல்
அய்யர்வந்தோர்கூலியா ளென்னவடிபட்டாரோ

தனக்குவமையில்லாச் சடாதரனுக்கேயிரங்கி
மனக்கவலையுற்றே மனஞ்சுழலவ்வேளையிலே
திருத்தூதரோடிச் சிவபெருமான்செய்தியெல்லாம்
விரித்துரைக்கக்கேட்டினிய வேதவருந்தூதர்களைப்
பார்த்துச்சிவனார் பரிவுடனேமண்சுமந்த
நேர்த்தியுளவின்களையென் னேராகக்காட்டுமெனப்
பாங்குளவின் தூதர்களால் காட்டப்பரிந்துசென்று
திங்குளவென்றன்னைத் திருத்தியாள்கொண்டவனே
எங்குற்றியென்பா ரிறைஞ்சுவார்கீழ்விழுவார்
புங்கமிகுநீறுபடும் பொன்மேனிபாதிகொண்டாள்
பிரம்படிகொண்டங்கமது புண்ணாகிநொந்தாளோ
காமுண்டோன்மண் சுமக்கக்கண்டினியசெஞ்சடைவாழ்
கங்கையாள்செங்கமலோன் காணரியபின்சிரத்தில்
பங்கமிகுமன்னேரப் பார்த்துமிருந்தாளோ
மாலயனுந்தன்பிறவி மாற்றப்பலகாலும்
கோலமுடன்பூசைசெய்ய கொண்டதிருவின்மலரோ
அரியசெழுஞ்சடையோ வம்மதியோவாயிரவாய்
வரியரவின்றன்படமோ மண்சுமக்குஞ்சும்மாடு
பஞ்சவன்முன்னாகப் பரிசெலுத்தக்கண்டினிய
மஞ்சுபெறும்பீதாம்பர முதல்வாம்பரியில்
திருச்சவுக்காலேற்ற திகம்பரம்பரம்பரச்சீ
மருக்கமழுஞ்செஞ்சடையில் மண்ணேறுந்தன்மைதனை
யோசிக்கவென்றால்வந் துற்றதெனவெண்ணிமனங்
கூசித்தவிக்குதெந்தன் கோவேயெனவழுவார்
தேவர்களுந்தேவர்க் கரசுந்திருமாலும்
ஆவலுடனயனும் அடிமைத்தொழில்புரிய
பெற்றவாவென்னிமித்தம் பிட்டதனையேகூலிகொண்டு
வற்றுதவைகைதனை யணையடைக்கவந்தீரோ
கொன்றைச்சடையானோர் கூலியாளாகவந்து
சென்றகோலங்காணச் செய்ததிருமாதவத்தோர்
தேவகங்கையென்றே சிறந்தவைகையின்கரையில்
ஆவலுடனின்றே யணையடைக்குமானவரோ
வானடனைச்செயித்த மன்னனேவன்றியம்பின்
தேனார்பொழில்சூழ் திருமதுரைத்தென்னகரில்

இருப்பவரோபிட்டினிதாய் இட்டவளோவென்றழுதார்
பருப்பதராசன்குமரிப் பாங்கானடியேமறவார்
இன்னவிதமாக இரக்கமுற்றிருக்கவைகை
துன்னுதிரையாறுந் தொலையவடிந்தவுடன்
பாண்டியனிதெல்லாம் பகவன்செயலாமெனவே
ஈண்டலுடன்சென்றங் கிருந்ததிருவாத
வூரார்தம்பால்வந்து உருகிமனமகிழ்ந்து
ஆரானுங்கானற் கரியபதத்தைப்பணிந்து
செப்புவான்மெய்யர் திருக்குலத்திலேபிறந்து
எப்புவியுமோங்க யெனக்கமைச்சனுகவந்து
முந்துவேதப்பரிமேல் முன்னேனைக்காட்டியெந்தன்
பந்தமறக்கிருபை பண்ணியநல்லுத்தமனே
விண்டயன்கீழ்மேல்த்தேடி மேவாதரும்பொருளை
கண்டுமறியாதென் கையாலழுக்கடைந்து
வஸ்திரத்தையண்டர்கொள வள்ளறனக்கேகொடுத்து
புத்தியற்றநாயேன் புரைகொண்டேனென்றுரைத்து
செஞ்சடையிலிந்து தரித்ததிருநேத்திரனை
மஞ்சுபரிக்காளாக்கும் மாமுனியென்றோராமல்
தீவினைக்குக்காரணமாந் திரவியத்தையேவிரும்பி
பாவிசற்றுமெண்ணாமல் பண்ணினேனிப்பிழையை
எல்லாம்பொறுத்தே யிரட்சிப்பீரென்றுரைத்தே
தொல்புவியைக்காத்தாயான் தொண்டுசெய்வேனென்று
யென்றுமுக்கண்ணன் யிருதாள்மறவாதார் [ரைக்க
தென்றிசையையாளுந் திறல்வேந்தனைநோக்கி
இவ்வுலகழித்ததொக்கும் யின்றுன்பனமகிழ்ந்து
செவ்வியுருந்தெய்வத் திருப்பெருந்துறைக்கேக
வாக்களிப்பாயென்று மறையோருரைத்திடவே
ஆக்கம்புகுங்கோளரசன் மனமதுநைந்துருகி
மன்றுள்நடனத்தான் மலரடிசேர்ந்தின்புறுவோர்க்
கென்றும்பொருள்விழைவ தில்லவாமென்றுரைத்து
அவப்பொழுதுபோக் காதறவோர்பதம்போற்றி
சிவத்தைமுதையுண்ணுந் திறவீர்திருவுளத்துக்
கெற்பனவேசெய்கவெனப் பாண்டிநாடுடையோன்
செய்நதையுளசேனையுடன் சேர்ந்தங்கினிதாகச்

சென்றன்ன நமேவார் திகளமைச்சுக்கோலமதை
கொன்றார் திருவருளைக் கொண்டாரினிமதுரை
ஆலவாயண்ண னடிவணங்கியண்டர்புகழ்
சிலமுள்ளதெய்வத் திருப்பெருந்துறைக்கேக
மனதில்நினைந்தே மயக்கமுறுஞ்சிந்தையர்போல்
தவனிமபெண்டாசை யில்லாத்தனித்தேகி
அஞ்ஞானம்போக்கியருள் கொடுத்தோனார்நோக்கி
மெஞ்ஞானங்கொளவார்கல் வேகமுள்ளகாற்றெனவும்
தடைப்பட்டகன்றதனைத் தான்தேடும்ஆவெனவும்
மடைக்கஞ்சாவெள்ளம் மெனவும்வழிநடந்து
தேனார்பொழில்கட் டிருமலைகள்காடுகளும்
மானூர்காத்தனன்பன் மாவழியெல்லாங்கடந்து
பெருந்துறையிலெய்திப் பிறப்பறுத்தோரைக்கலந்து
மருந்தெனவிஷத்தையுண்ட வள்ளலடியேவணங்கி
பர்தவினையெல்லாம் பறக்கடித்தாய்போற்றியென்பார்
சொந்தமதாயென்றனையாள் துய்யோனேபோற்றியென்
மாலயனுங்காணா வடிவுகந்தோயான்காணச் [பார்
சிலமுடன்வந்தெனையாள் தேவனேபோற்றியென்பார்
மீனவனும்வந்த வினையாவுமேகெடுத்தான்
தேனினியபாதமலரிற் சேர்த்தோய்போற்றியென்பார்.
பழுதில்லாமாதவத்து பண்புளவர்திக்க ளாய்
வழுதியடியேற்ற மகாதேவாபோற்றியென்பார்
பாதஞ்சிரமேசேத்திப் பணிந்துருகிமேலவனை
நாதனிருக்குந் தூலத் தொட்டெடுத்தான்னுதலில்
நீற்றைப்புனைந்தறிவு நிற்கவருள்பார்வைசெய்த
வீற்றிருந்தார்கன்மமெனும் வீட்டையகலக்கடந்தார்
அப்போதெழில்சே ரென்னப்பன்மனமகிழ்ந்து
செப்புங்கைலையெனச் செய்தாகுமாலயத்தை
நின்மனதுக்கேற்பனவாய் நியமியெனவேயுரைக்க
தன்செயலைமாற்றும் தலைவராவர்க்கிசைந்து
கம்மியர்கள்தன்னை யழைத்தேதக்கனகமட்டும்
வர்மமலையென்ன வெழிலுறுநற்கோபுரமும்
மண்டபமுஞ்சுற்று மதிலும்மலர்வனமும்
கண்டாரனான்பர் களிகூர்ந்திதையமதில்

தங்கிமெத்தாடிமன்று ளாடி தனக்குவப்ப
சிங்காரத்தூபதீபக் கால்சிறப்பாக
செய்தார்வினையகலச் செய்தாந்திருத்தாளைப்
பொய்யாத்துணையாக்கொள் புண்ணியருமண்ணலடி
போற்றியறவோர் புடைசூழ்ந்தினிதிருக்க
ஆற்றையணிசெஞ்சடையோன் அடியார்முகம்பார்த்து
எம்முருவுங்காண வெழில்கைலைமாநகரார்
தம்மனதிற்கொண்டு தயங்குகின்றுதலினால்
வாழ்ந்திங்கிருமி னெனவுரைக்கமாதவத்தோர்
சூழ்ந்திங்கினியபல தோத்திரமெல்லாமுரைக்க
இனியாங்களின்றே யிருப்பதரிதென்றுரைத்து
கனிவாய்திறந்தேவரைக் கைவிட்டையோவெனவே
பரிந்தழுவார்தம்மேற் பரமனருள்கூர்ந்து
வருந்தலொழித்து மணியார்குருந்தடிக்கீழ்
தெய்வபீடமைத்தென் றிருவுருவமாயுவந்து
சைவநெறியாம் பயிரதனைத்தற்கார்க்கும்
நன்மையெல்லாங்கொண்டிந்தப் பொய்கையிதனடுவே
தோன்றுந்தழலில் விழுத்தோன்றுமெமதிடப்பால்
மான்றோன்றவெள்விடையின்வந்துகார்ப்போமெனவே
நற்றவத்தோர்சூழ்ந்துவர நஞ்சுண்டகண்டனவர்
பொற்பதியைநாடிப் புறப்பட்டாரங்கறவோர்
தங்காமயக்கமுற்றே தாயகன்றபிள்ளையென
பூங்கனலைப்போற்றிநின்றார் போயினர்காணம்மானை
அப்போதெழில்சேர மன்வாதவூரய்யர்
மேய்ப்பாயெழுந்தன்பிறை மிலைந்தோன்றன்பிறகே
போயினார்கண்டப் புனத்திலோர்கொன்றைமர
மேயினான்னிழலில் வீற்றிருக்கலுற்றார்காண்
பின்தொடர்ந்தோர்சென்றே பெரியோனிடத்தில்வந்து
மென்பதத்திற்றாழ்ந்துகண்ணீர் விழவன்றிரஞ்சிவின்அ
தவத்தோரைக்கண்டினிய தன்மையுடனேபராஞ்
சிவனருகில்வைத்திதனைச் செப்புவாரெப்புவிக்குந்
தெய்வமறையொக்கும் திருப்பெருந்துறையதனில்
சைவநெறிபேபெருகுந் தன்மையைப்போலேபெருத்து
அண்டத்திலுங்காணும் அப்புறத்திலுந்தோணும்

எண்டிசையுமேசூழ்ந் திலங்குங்குருந்தலவு
சேத்திரத்தில்வந்த தெமதடியார்வல்வினையை
நீத்தாளவந்து வசிப்போம்நெடியோன்கைச்
சங்கல்லால்வாய்ந்த தணிப்பல்லியமுதவா
தங்கமிகுமாதவத்தோய் யாதாமெனக்கேட்பாய்
என்னெனிலோசை யடங்குமிடமன்றியெழில்
மின்னேரிளையாள்மென் மேனிதனிற்பாதிகொண்டான்
நாணக்கனவினிய நடனம்புரிதலாலுங்
கோணலிலாமனத்தோய் கூறினேனென்றுரைத்து
புட்கரமளாவுகின்ற பொற்குருந்தினம்முடைய
நிட்களங்கபாதமதை நேசித்துறுதிகொண்டு
வாழ்வாயம்மாதவத்தோர் வாழுநாளுள்ளமட்டும்
தாழ்வில்லாவித்தீர்த்தம் தன்னிலெழுந்தோங்குமழல்
கண்டறவோர்தியிற் குதிக்கநீகண்டவுடன்
விண்டமிலோங்கி விளங்குங்குருந்ததனை
நாடித்துதித்தன் நகரைவிட்டுச்சீக்கிரமாய்
தேடியுத்தரகோச மங்கையெனுமூர்புகுந்து
சித்தியெட்டுமேயடைந்து தெய்வீகமாயிவளன்
சுத்தியுள்ளலிங்கத் துங்கவடிவாயிருக்கும்
நம்முடையநற்றவங்கள் தன்னின்மேற்சொல்தலங்கள்
தம்மைவணங்கத் தயங்குவடிவேகாணக்
காட்டுவோமென்றேகிக் கழுக்குன்றநற்றவத்தை
தேட்டமுடன்கண்டிறைஞ்சி திரும்பியித்தலத்தில்வந்து
சிதம்பரத்துக்குப்போய்ப் புத்தரிகல்செய்தெமது
பாதமாஞ்சாயுச்சியம் பதவிபெறுவாயெனவுஞ்
சொல்லிக்குளவி யெடுத்தபுலித்தோல்விடத்தில்
அல்லாமிவ்வேறோரிடத்தில் கைக்கவவ்வுருவம்
மாறிக்குளவி வடிவானதன்மையைப்போல்
ஈறிலாவித்தலத்தி லின்றுனக்குபதேசம்
பண்ணினோமேலாம் பதவிபெறுதற்கிடமாய்
எண்ணிறந்துகங்கண் டெழிற்கைலைமாநகரில்
பாம்பும்புலியும் பதஞ்சேவித்தின்புறவே
காம்புறழ்கோளெம்மையுங் கண்டுள்ளம்நாணிடவே
திருநடனஞ்செய்குவமற் றின்னமுமேதென்னில்

அரியசிருட்டிதிதி யனுக்கிரகஞ்சங்காரஞ்
சொல்லியதிரோபவத்தோ டுறுபஞ்சகிர்த்தியத்தை
அல்லும்பகலும் நடத்துவதாமன்றியுமுன்
சென்மபவத்தனையைச் சென்றறுத்துஞ்சுத்தமுள
நன்மைகொடுத்துக்காக்கும் நற்றலமேயத்தலமாம்
மாலயனுமிந்திரனும் மற்றுமுள்ளதேவர்களும்
சீல்மிகுபாம்பு புலியுந்திருப்பொலிந்து
நல்லதில்லைமூவா யிரருந்தினம்நாடும்
எல்லையுளதா மினியகைலைப்பதியில்
சென்றுசிதளிவாயென் றிருத்தாள்வணங்கிநின்று
நன்றெடுத்துத்தீதுதள்ளும் நற்றவர்க்குநெற்றியினில்
நீறணிந்துநில்லுமென நில்லாதுபின்றுடற
ஆரணிந்தோன்காணு தகன்றேனகன்றவுடன்
அண்ணனைவெருண்டே தொழுதகைசிரமேசற்றி
எண்ணரியவன்பருடன் கலந்தெழில்மிகுந்த
குருந்தடியிற்றெய்வநிகர் கொள்ளப்பீடமமைத்து
கருந்தடங்கண்மாதுபங்கன் கமலமலத்தாள்வருத்து
பன்மலர்கொண்டர்ச்சித்து பத்தியுடனேவணங்கி
சென்மபவந்தீற்குந் திறத்தோரிடப்புறத்தில்
பெண்ணேணந்துவோன் நண்பிலாதம்மேற்பாடுகினும்
கண்ணருள்செய்தெப்பொழுதுங் காப்பாற்றுமாமென
திருநமச்சிவாயம்வாழ் கென்னுஞ்சீர்வாய்ந்தெடுத்து
மருவிலாஞானத்திரு வாசகமாமதனை
பாடியேசின்னாளப் பதியதனிலேவசித்து
வாடிமிகுமாத வருடன்வாழன்னாளில்
கங்காதரன்பாதம் கண்டதிருமாதவத்தோர்
சிங்காரப்பொய்கையதில் சென்றுலவுமக்கினியைக்
கண்டறிவோரெல்லாம் கருத்திலைந்தெழுத்தையுன்னி
வன்றமிழாரன்றிமற்ற மாதவரெல்லாமழலிற்
குதித்தாராண்விடைமேற் கொண்டுமைதோணுவருகிற்
றுதித்தமராபூமாரித்தூவி வணங்கந்தரத்தில்
எழுந்தருளும்போதங் கினிமையுடனேபணிந்து.
டுசழுந்தழலில்வீழ்ந்தோர் சிவகணமாய்ச்சென்றடிக்கீழ்
தாங்கினாராகத் தனிமுதல்வனேதுரைப்பார்

உங்களையேன்பின்னே யுடன்கூட்டாதேகியதும்
செங்கழுநீரோடையதிற் சென்னிறமதாகிவளர்
வங்கியழச்செய்தே யதில்மூழ்கச்செய்ததுவும்
என்னதுவாமென்றால் யிருந்திருவாதவூரான்
தன்னவனைக்கொண்டுதில்லை தன்னில்வரும்புத்தர்களை
வெல்லநினைந்தவனை விட்டுநாமேகுகையில்
அல்லல்ப்படுவானென் றருகிருக்கநின்றவரை
வைத்தேதகினோம்பின்னும் மானிடவடிவுகந்த
எத்தேவனானாலும் மெய்துமலர்வாசனைகள்
ஆனதாலம்மலரா ரரியதீர்த்தந்தனிலே
மானல்சொல்லக்கூடாத அக்கினியையுண்டுபண்ணி
பொய்யாகத்தோன்றும் உடம்பதனைப்போக்கிவித்து
மெய்யாகுமிவ்வுடம்பை மெவ்வளித்தோமெனவே
யென்றுரைபகந்துகண நாதரெங்குமேநெருங்க
மன்றுகைலைமலைக்கே மறைந்தாரப்போது
திருவாசகதமிழைச் செப்புவார்வேரேது
மருவார்ந்தகொன்றை மரநிழலிலேயிருந்து
சிவயோகஞ்செய்தடியார் தீயிற்புகுந்தவிதம்
பவமகற்றிடைவிடைமேற் சென்றுவந்தபாங்கதுவும்
முன்புதமக்காகுமுறு வெய்திமுன்னவன்றான்
அன்போடிறைஞ்சியதும் அழகுபொருந்தில்லையதில்
தெய்வச்சபையடைந் திருநேத்திரனடியில்
அய்யமறவாழ்வடைய தெல்லாமறிந்தவரும்
செங்கைகுவித்தார்விழிநீர் சிந்தினாரங்குவந்து
எங்கனெளித்தாயெனக் கின்பந்தந்தாண்டாய்
என்றழுவாரிக்கரையில் எந்தைவிடைமீதேறி
நின்றதலமித்தலமோ வென்றுநிலத்திற்படிய
வீழ்வாரெழுவாராம் மென்குருந்தின்மன்னுகழல்
தாழ்வார்பிறவி தமிழ்க்குருந்திருச்சதகம்
மெய்தானரும்பி யெனப்பாவிடையேறும்
அய்யனுரைத்தருளும் அத்திரத்தையுற்றறிந்து
சைவநெறியும் அஞ்செழுத்துந்தழைத்தோங்க
செய்துந்தவராச தீரனெனவிளங்க
ஆகுதருமனு லெட்டதுவுமேநடத்தி

வாகுசேர்மாறனெனில் வாய்ந்தோன்பதிபரிதி
தெற்குவடக்காளுலுந் தென்கடல்நீர்யோளுலுஞ்
சொற்குன்றுவள்ளல் தொடுகடல்சூழ்சாலயதில்
நீக்கமறவெங்கும் நிறைந்தமனுமேயரைக்
காக்குஞ்சிலாக்கியவான் கவிசொல்லடைக்கலமாந்
தாசன்தனக்கினிய தனந்தந்திருடம்பிலும்
மாசற்றவீடுதவி மாநிலமெல்லாங்கார்த்து
தேனூர்ந்தகொன்றைத் திருமுடியோன்பொற்கழலில்
நாளுமலர்தூவி நாட்டுமைந்தெழுத்தையுன்னி
எவ்வுலகுங்கார்த்தருளும் ஈசனருந்தோழனென
செவ்வையுளநன்மதிகொள் செல்வருடன்சேர்ந்து
கும்பிட்டிறைஞ்சியுமே குற்றமற்றசுப்பிரமண்ணியர்
தம்பிரான்சாமிபுகழ் தங்குந்திருநகரைக்
காக்குஞ்சிவனுறையும் காரார்குருந்ததனை
வாக்குமனமுமொன்று மறையோர்பணிந்தெழுந்து
சென்றுத்தரகோச மங்கையெனுமூர்புகுந்து
குன்றனையகோயிலெய்தக் குற்றமில்லாதேயடிமை
கொன்றோன் திருவுருவைக் காணாராய்க்கொள்மயக்கம்
கண்டரனூர்தன்னுருவைக் காட்டக்கனிந்துருகி
தன்னிகரான்கழலைத் தான்வணங்கித்தானவன்முன்
சொன்னதலமெல்லாம் தொழுதேத்திப்பின்னுமவர்
திருவிடமருதூரிற் சென்றுதொழுதேத்தி
மருவிகந்தவாரூர் வணங்கிச்சீர்காழியிற்போய்
தொல்லைவினையுடையார் தொழுதிறைஞ்சிநல்வினையை
வெல்லுதவமென்றே விருப்பமுடனேசிலநாள்
தங்கியிருந்ததலத்தைத் தான்வணங்கிப்பாங்கதுசேர்
துங்கக்கழுக்குன்றமதைத் தொழுதுவுத்தரத்திசைபோய்
மணிமுத்தாமாநதிசூழ் அன்னவிருத்தாசலத்தைப்
பணிந்துதிருவெண்ணைநல்லூரிற்சேர்ந்ததைப்பணிந்து
அன்னகரகன்றுதிரு அண்ணாமலைக்குவந்து
நன்மைதருமலையும் நாடுமருணகிரியும்
வணங்கித்துதித்தேகி வன்காஞ்சிமாநகரில்
கணங்கொண்மணிகுயிற்றிக் கதிர்விடுமவ்வாலயத்தை
பணிந்தன்னகர்கடந்திப் பயனடையத்தேவர்கள்முன்

அணிபணிபாய்நின்று தொழுமச்சேத்திரமான்
திருக்கழுக்குன்றமெனுந் தெய்வீகமாமருந்தை
முருந்தின்முறல்மடவார் மோகவலைசிக்காமல்
ஞானவாளாலறுத்த நாயகருமத்தலத்தில்
தேன்வாவின்மலராற் செய்யபந்தனைப்போற்றி
சின்னாள்வசித்தப்பின் தேசத்தலங்களுளதிங்
கன்னல்ரசமென்னைருகிக் காட்டும்நதிகள்பலவும்
ஒருங்குடைந்தேத்திப்பணிந்துநெடியதில்லைமாநகரைச்
சாருமணமுள்ளார் தனித்தேகுமவ்வழியில்
இருமருங்குங்கொன்றைமலர் தும்பருலகெனநிற்க
அருந்தமிழினின்சொற்போல் அளிமுரண்டுபண்பாடக்
கேட்டினியபாடர்கட் கிளர்கரத்தபிநயத்தைக்
காட்டுமவர்போற்சிறந்த காந்தண்மலர்மலரை
சிவஞானமில்லாச் சிறியோர்கொள்வேடமென
அவங்கொண்டழகுயர்ந்த வாமுருக்குமேநெருங்க
பள்ளம்படர்புனல்போற் பண்பிலர்கள்தம்முடைய
கள்வமனம்போற் கண்பிலர்கள்தம்முடைய
பக்கத்தினின்றொளிருங் கமுகமரங்கள்பலவும்
தக்கபடிகாலசைக்குஞ் சாமரைகளாகிநிற்க
மாந்தளிரைக்கோதுகின்ற வண்ணக்குயில்கள்பலவும்
ஆர்ந்தல்சின்னமூதுவர்க ளாகவன்புடன்தேவர்
தூவுமலரென்னமலர் தூவுஞ்சண்பகச்சோலை
காவும்பலவளஞ்சேர் காவுங்கடந்தேகி
உயர்ச்சிபொருந்துமெயி லுயர்கோபுரநிரையும்
வியன்மாளிகைபலவும் மிளிர்கும்பங்கள்பலவும்
கண்டழகுசெய்வதனைக் கண்டுளமகிழ்ந்தவரும்
அண்டாயனமரரே வாணிகொள்புலியூரில்
சென்றூர்வேதத்தொனியுந் தேவர்தொழுமத்தொனியும்
பொன்றுகீதத்தொனியும் பொற்பல்லியத்தொலியும்
அந்தணர்கள்சொல்லாகமத்தொலியுமந்தநிலாச்
செந்தமிழோதுந்தொனியும்சேர்ந்துகடல்போல்முழங்க
கேட்டினிமையாயவருள் கிளர்தெருவெல்லாங்கடந்து
நீட்டமுடையமலை நேர்கோபுரவாயில்
தன்னுட்புகுந்து தனிர்சிறசபையதனை

பொன்பெண்டவனி விழைவில்லார்புனிதமதாய்
கண்டுதொழுதேத்தி யண்டர்க்காகவிடமதனை
உண்டுகாத்தாண்டுமுயர் மார்க்கண்டேயருக்காய்க்
காலன்றனையுதைத்தக் கஞ்சமலர்ப்பாதமதை
கண்டேனெனக்கண்ட பத்துங்கனிந்துரைத்து
குன்றுக்கதியுதவுங் கோலவடிவுஞ்சிறந்த
மன்றினிலுங்களங்க மாற்றுமனுபூதியிலும்
புத்திதனைச்செலுத்திப் புகழ்செயலிலாதவராய்
சித்திரம்போலரனார் சிவனாரடியவரும்
கைகாலசையாமல் கண்ணேனிமையாமல்
செய்காரியமலரைத் தெரியாமெய்காவலர்கள்
அய்யோவிம்மாதவனா ராரோவெனவிரங்கி
பொய்யாதமாமறையீர் போங்காண்வெளியிலென்றார்
அப்போதுவாதவூ ராளியதுகேளாராய்
ஒப்பிலானிடத்துற்ற வொளியின்றான்மூழ்கி
தேகமறந்தே திருத்தம்பமென்னநிற்க
வேகமுள்ளமெய்காவலர்கள் பின்னுமேவதுசொல்வார்
போவென்னப்போகான் பொருளுரையான்பித்தனிவன்
ஆமெனமெய்காவலர்கள் அஞ்சிடுமவ்வேளையதில்
உடல்விட்டேகுமுயிர்வந் துற்றதெனவேகொடிய
விடமுன்றோன்றன்னடியரும் விழித்துக்கைகூப்பி
சங்கராகெங்கா தராசம்புவேயரவத்
துங்காபரனாசுருதி முடிவேமதிசேற்
செஞ்சடையாபோற்றியென சிந்தித்தேசிற்சபையைக்
கஞ்சமுகத்தையர் கடுகிவலமாகவந்து
முன்னவன்றனைப்பணிந் தம்மூர்த்திதனக்குரிய
கன்னல்மொழியாளுமைதன் கஞ்சமலர்த்தாள்வணங்கி
அக்கோவிலன்மேல் பாலமர்ந்ததிருப்புலியூர்
சிக்கெனவேசென்ற சிவன்றாள்வணங்கியபின்
நாகேச்சரம்புகுந்தன் நாதனடியைத்துதித்து
ஏகத்தில்லைமூவா யிரவாழப்புலியூர்
வீதியிற்போகும்போது மேனாட்டமூர்தமதில்
கோதிலமூர்தமெனக் கூறுதிருவாசகத்தைப்
பாடியேகும்போது பலவளஞ்சேரத்தெருவில்

கூடிச்சிலகன்னியர்கள் சோமான்தனக்குவந்த
பொற்சுன்னமன்றிடித்தல் போலப்பொற்சுன்னமோ
நற்சோலைதன்னில்விளை யாடும்பெண்களால்நின்ற
வார்த்தைதிருப்பொன்னூசல் வண்டிருப்பூவல்லியென்
சேர்த்துப்பண்பாடிமற்றோர் சிறுபெண்டனையின்றுள்
தன்னையழைக்கத் தவமுனிவர்தான்கேட்டு
அன்னைப்பத்துப்பாடியும் வண்டார்த்தேசத்தங்கேட்டு
அவப்பொழுதுபோக்கா தனிகர்ளினிமையுறச்
சிவக்கொழுந்தைப்பாடுமெனச் செப்பிக்கோத்தும்பி
பாடியபூஞ்சோலையின்ப பண்புளமாவின்குயிலே
நாடியெனையாண்ட திரு நாயகனைவாவெனவே
கூவாய்குயிலேயெனக் குயில்பத்துமுரைத்து
பூவார்பொழில்சூழ் பொற்கிளிகாள்சிக்கெனவே
மாலயனுங்காணு வடிவோன்திருநாமம்
சீலமுடன்செப்புமெனச் செய்தசாங்கமுரைத்து
மன்னிடைவந்தெந்தனையாள் மகாதேவனல்லாது
நன்னுமொருதெய்வமதை நாடேனெனப்புகன்று
அன்னகரதன்புறத் தரியபன்னசாலைசெய்ய
பொன்னகராமென்னப் யுருந்தினியமாதவரும்
அன்னைபிதாவைப்போ லரிவையுடன்வந்தாண்ட
தன்னவன்றுள்வணங்கித் தானிருந்தாராகவிப்பால்
கங்காதரன்பாதங் கண்டதொருமாதவத்தோன்
துங்கச்சமுத்திரஞ்சூழ் தொல்புவியெல்லாம்பார்க்கும்
ஆசையுடையோனு யருஞ்சோழநாடடைந்து
மாசகற்றுந்தில்லை மணிமன்றதைவணங்கி
சென்றீழதேசத் திருவளத்தைப்பார்ப்போனுப்
பின்றுள்சடையோன் பிரியமுடனன்னகரில்
வந்திருந்தெழுந்தோரும் மற்றதிற்றங்குந்தோறும்
எந்தைவாழ்தில்லைநக ரெக்காலமும்வாழ்க
வாழ்கவென்றுரைபகர்ந்து யருந்தார்வளங்களது
தாழ்வில்லூராரறிந்து தார்வேந்தனுக்குரைப்பார்
ஒருத்தனுப்வந்தெம் முயர்நகர்க்குள்ளேயிருந்து
வருத்தமிலனுகிப் பலிவாங்கிப்பொசிப்பதெவன்
கண்டத்தில்ருத்திராட்சங் கரத்தில்திருக்கடுக்கன்

வண்டமிழின்சொற்போல் வளர்கைலைவாழ்கவென்று
சொல்லுகிறானென்றவரும் சொல்லவிராசன்கேட்டு
நல்லதவனைப்பார்ப்போம் நாடியழைத்தாருமென
செய்யதிருநீறணிவார் செப்புவார்வைப்பனைய
ஐயமெடுத்துண்ணும் எனக்குமரசனிடம்
என்னகாண்வேலையங்கே என்றார்பெரியவரும்
அன்னபோதத்தூதர் ஐயர்முகத்தைப்பார்த்து
சொல்லுவார்மெய்யாகச் சொல்லாகமத்தின்வழி
செல்கின்றீர்பூமியதிற் சேர்ந்தவாழெல்லோர்க்கும்
மாதாவென்றே வழுத்துமரசனிடம்
வேதப்பொருளேவா வென்றுரைக்கவேயெழுந்து
சென்றேயரசனிடம் செம்மாதவத்தோனும்
என்றும்பொன்னம்பலம்வாழ் தென்னவுரைத்தங்கிருந்
அப்போதரச னருகிருந்தோரைப்பார்த்து [தார்
செப்பியபொன்னம்பலம் தென்னவதுசெப்புமென
மாதவருஞ்சொல்வார் வளர்சோழமண்டலத்தை
போதரெட்சித்தாளும் பூபதியாஞ்சோழனவன்
தன்னாட்டினிய தலங்களனேகமதில்
மன்னுசிதம்பரமா மென்றோர்தலமதனைப்
பண்டுதில்லையென்றே பகர்வார்பரமன்முதற்
கண்டதலம்பூமியத்தி காணுதல்பரமதனிற்
சிற்சபையில்நின்றினிய தேவிகளிப்படைய
சொற்கினியவாடல்செய்தான் சுந்தரனுமெங்கையரும்
மனுச்சக்கரவர்த்திமகன் மாவிரண்ணியவன்மனுக்கு
தனுக்கொண்டிருந்தகுட்ட நோயைத்தவிழ்த்ததுமேல்
செய்ததவமில்லாத் தீர்த்தந்தனில்மூழ்கில்
எய்துபலனெம்மால் இயம்பரியதானதுவாம்
பாரச்சடையான் பதந்துதியாதவுடலும்
ஈரமிலாமனங்கொண் டிருக்குங்கொடியவரும்
ஒருக்காற்சிதம்பரமென் றோதினலுத்தமராய்
கருக்குழியில்வீழாக் கதிபெருவாரனதினால்
செப்பரீறும் அஞ்செழுத்துந்தெரியாத
பொய்யுடலும்பொய்நாவும் பூண்டோய்பொன்னம்பல
எங்குஞ்சிறந்தோங் கிதுவேபொருளாகும் [மும்

அங்கமுடிமன்னவெனச் சொன்னாருகிருந்த
புத்தகுருவானோன் பொருக்காமனத்தோனய்
சித்தசனேரானோன் திருமுகம்பார்த்தேதுரைப்பான்
அரசமரத்தென்னும் அமர்ந்தபுத்ததேவனிருக்கத்
தரணிதனில்வேறுதெய்வம் உண்டோவத்தன்மைதனை
பார்ப்போர்திருச்சபையைப் பார்ப்போங்கதிவீட்டில்
சேர்ப்போன்திறமதனைச் சென்றறிவேனென்றுரைத்து
இக்காரியத்தை இயலுடன்மூன்றுதினத்தில்
தக்கோரறியத் தரணிபுகழ்புத்ததெய்வக்
கோவிலேயாவர்களுங் கொண்டாடத்தில்லையிற்போய்
மேவிவாதிற்செயித்து வென்றுவருவேனெனவே
தந்தச்சிவிகையின்மேற் கொண்டுதனக்குவந்தோர்
வந்தனைசெய்தேத்திவர மாதலமெலாங்கடந்து
தெய்வதலமென்னுஞ் சிதம்பரத்திற்சென்றிருக்க
பொய்யுரையாய்நாவுடையாய் புத்தராசன்மகட்கு
பண்டிருந்தவூமைதனைப் பரிகரிப்பமெனவேத்
தண்டிகைமேற்கொண்டு தனித்தில்லையிற்புகுத
முன்புவந்தபுத்தகுரு முன்னவன்றன்னாலயத்தில்
பொன்மண்டபத்திருக்க புத்தமுகிலிங்குவந்து
ஆசிரியன்பதத்தை யன்போடிறைஞ்சியவன்
மீதசிலாவச்சபையில் சென்றிருந்தானுகவிப்பால்
உரக்கந்தரித்து மூயாம்புலிதரித்தும்
பரவையெழுமாலம் மருந்தும்பசுபதிதன்
ஆலயப்பணிவிடைசெய்பவர்கள் புத்தர்வந்ததன்மை
சிலருடனறிந்துசேர்ந்து புத்தர்தன்னிடப்போய்
தத்தமனம்நொந்துவிழி தன்னிலழல்கதுவ
புத்தர்தமைப்பார்த்துவெகு பொல்லாப்புரைபகர்ந்து
தீயமனமுடையீர் செல்விரில்லாவிடிலோ
தூய்மனதுபோரோமென்றவர்கள்சொன்னவுடன்
புத்தகுருவானோன் புகல்வானுயர்ந்தவெழிற்
சித்தசனேர்சோழன் திருமுன்னுயர்ந்ததர்க்கம்
பேசியுங்கள்சைவநெறி பிசகாமென்றுதள்ளி
மாசிலாப்புத்ததெய்வ மானத்துவநிலையாய்
செய்யாமற்போகேன் எனச்செப்பவுங்கேட்டு

மையலுறுமனத்தா ராகிமனவேகமதாய்
சென்றதபோதனற்குத் தில்லைமூவாயிரற்கும்
நன்றாகவிச்செய்தியை நவின்றாரவ்வார்த்தை
கேட்டுமனம்புண்ணுப் கிளம்பியொருமித்தவர்கள்
வாட்டமில்லாப்புத்தனிடம் வந்துசினந்தேதுசொல்வார்
அஞ்சுதலுமில்லா தரியமரியாதையில்லா
வஞ்சகநீயேவந்த வகையேதெனவுரைக்க
துங்கபுத்தன்சொல்வான் மறையங்கவாகமஞ்சொல்
இங்கிதப்புராணவகை யாலுமிருங்கடவுள்
தெய்வமேயென்னத் திறப்படுத்துவீர்யானும்
அய்யமரப்புத்ததெய்வம் அத்தெய்வம்தெய்வமென்று
என்றுபகர்வோ னெதிர்பகர்வீரென்றுரைக்க
சென்றுமறையோர் சினத்தவர்களேதுரைப்பார்
துஷ்டபுத்தியாலே தொடுத்துவழக்கெடுத்து
கெட்டுப்போங்காலம்வந்து கிட்டினதோவானாலும்
பெருந்தன்மையில்லாத பேயாநீசொல்வழக்கை
ஒருசொல்லால்வென்றிந்றேயோட்டிவிடுவோமெனவே
மிக்கதிறல்மன்னவரும் மெய்யாந்தபோதனரும்
தொக்கசபைமுன்னே தொடுக்கனவன்சொல்வழக்கை
பத்திப்பேசிச்செயித்தாற் பண்பதுவாமன்றியும்
நத்துமூலகோரெவரும் ஞாயமாமென்றுரைப்பார்
ஆதலாலன்றே யருஞ்சோழநாடனுக்கும்
வேதப்பிராமணர்க்கும் விண்சடையம்மாதவர்க்கும்
கலைக்கியானவல்லவற்கும் கடுஞ்சொல்லுடையபுத்தன்
மலைக்கும்படிக்கிவ்வா திட்டவனைவெல்லுகின்ற
தெய்வச்சபைநாளைவந்துச் சேர்வீரெனவோலை
அய்யமாரன்றெழுதி யன்றனுப்பச்செங்கதிரோன்
மேவினனைய்பரக மேவினான்றிரவோர்
சேவிடையான்கண்ட மெனச்செல்லுமிருளின்பரப்பை
தேய்த்தாயங்கிரணஞ் செல்லவிந்துமேலெழும்பி
ஆய்க்கிரிகராயுல கெங்குமடைந்திடவே
பொற்புடையதன்னகத்தில் புக்கிருந்தமாமறையோர்
கற்புடையோரிட்டவ்வண்ணம் உண்டுகளித்துறங்க
அழகிவியமன்றாடும் அய்யர்கரத்திற்பிரம்பும்

தழைந்தசடைமுடியும் தப்பகற்றும்நீறணிந்து
மேனியும்பூநூலும் எழில்ருத்திராட்சமணியும்
மானிடத்திற்கொண்டோன் மறையோன்கனவில்வந்து
வருந்தாதிரிந்த மணிநகரத்தெல்லையதில்
பொருந்துந்தவமுடையான் புண்ணியவானென்னிருக
ஆவான்திருவாத வூரான்றனையழைத்தால் [ண்
மேவாதபுத்தன்றனை விரைவினிலேசெயிப்பான்
ஆதலாலின்றே யருமையுள்ளமாதவத்து
வாதவூரானேவா வென்றவுடனேவருவான்
என்றுகுருமூர்த்தி யியம்பிமறைந்தவுடன்
அன்றெழுந்தவேதியர்கள் ஆலமுண்டோன்தன்கனவில்
வந்துசொன்னதன்மை மதித்தவர்களுள்மகிழ்ந்து
சிந்தித்தெழில்கரத்தைச்சென்னியின்மேற்சூட்டினராய்
கோவில்திருமுகப்பில் கூடியொருவற்கொருவர்
ஆவிங்கரெந்தையடைந்துகனவிலுரைத்து
தெய்வரகசியத்தைச் சேர்ந்தொன்றாகப்பேசி
மையல்பொருந்தும் மனமுமிகமகிழ்ந்து
தங்கள்முகமெல்லாந் தபனன்றனைக்கண்ட
செங்கமலமொத்தார்கள் தில்லைமூவாயிரரும்
சிற்சபையிலேநிருத்தம் செய்தோன்றனைநினைந்து
பொற்புடையமாதவனார் புக்கருந்திடந்தேடி
சென்றாரச்சத்தம் திருச்செவியிற்கேட்டவுடன்
பொன்றாதமாதவத்துப் புண்ணியர்யோகம்நீங்க
கண்டுதில்லைமூவா யிரருங்கனவதனில்
அண்டர்பெருமாள் அகமகிழ்ந்துரைத்ததனை [ந்து
சொல்லக்கேட்டானதின்முன் சொல்லக்கேட்டாரெழு
தில்லைக்கேட்டாருடன்போய்தில்லைவனத்தானபதத்தை
போற்றியருள்பெற்றுவந்து புத்தர்கெருவமதை
மாற்றும்படிக்கினிய மண்டபத்தமர்ந்தவர்கள்
தீமையுறுவோர்முகத்தைக் கண்டாற்றீங்குண்டெனவே
மேன்மையுடையாரம் மிருந்திரைபோட்டாசனத்தில்
வீற்றிருந்தாருகபணி மின்னுகிரீடந்தரித்த
மாற்றலர்க்குச்சிங்கமென வளர்சோழன்பாவாணர்
வேதப்பிராமணர்கள் மிக்கபெரியோருடனே

சீதமிகுதன்பனைசூழ் தில்லைவனத்திற்புகுந்து
கனகசபாநாயகரைக் கண்டுதெரிசித்தெழுந்து
அனங்கனெழில்வாய்ந் தரசன்விரகனக
மண்டபத்திலமர்ந்ததிரு வாதவூரர்பதத்தைக்
கண்டுமெழில்சேர் காவலனுஞ்சீதமதி
பன்னத்தறித்தோனன்பர் பாலிருந்தகாவலனை
நன்மதிகொள்ளீழமகா ராசன்பணிந்தவன்முன்
கொடுக்கவேண்டுந்துகையைக் கோமானெதிர்செலுத்தி
எடுத்தருளுமென்றுரைத்தும் ஈழன்மறுத்தேதுசொல்
சென்னிவளவோனே திருவுறுசெம்மாலேனன் [வான்
தன்னிகரில்லாதவனே தகுதியுள்வாழ்வடைவீர்
என்றீழதேசத் திறைவன்வியந்துரைக்க
வன்றியல்சேர்சோழமகா ராசன்மனமகிழ்ந்து
தீங்காதவிர்மணியும் நீலநிரத்தானையதும்
பாங்காகமுன்கொடுத்தாப் பண்புடையீர்வாருமெனத்
தன்பக்கத்துற்றிருக்கச் சார்பாயிடங்கொடுத்து
தென்புடனேவீற்றிருந்த தெய்வமகாசபையில்
அப்போதெழில்சேர் அருள்திருவாதவூரரர்
தப்புடையபுத்தனுடன் தானெதிர்த்தினிதாக
வாதுசெய்யுமாசபையைப் பார்ப்போமெனமாலும்
தாதவிழுமென்மலரிற் றங்குவனுமட்டதிக்கு
பாலர்களிந்திரையர்கள் பகர்வோனெழுமதியும்
சீலமுள்ளபாதவரும் செங்கணுருத்திரரும்
ஏதுசபையில் மறைந்தவர்கள்வீற்றிருக்க
முந்தங்கிருந்தாத வன்குலத்துதித்தமுகில்
சென்றபவோர்தன்பதத்தைச் சேவித்திதுபுகல்வான்
நன்றிதருஞானமில்லா நாட்டும்பாரமுமக்காம்
பொல்லாதபுத்தருயிர் போற்றும்பாரமெமக்காம்
நல்லதவத்தையாவென் நன்றாய்முகமலர்ந்து
மதியதாசற்றில்லாத மாமோடர்பல்வளஞ்சேர்
பதியிதனில்வந்தவிதம் பகருவாயென்றுரைக்க
புத்தகுருவானோன் புகழ்வானெனையாண்ட [வம்
வஸ்த்துவெனும்புத்ததெய்வம் அல்லால்மற்றுள்ளதெய்

இல்லையென்றிசைத்துரைத் தெழில்பெரியோற்கொப்பி
வித்து
நல்லெழில்சேர்பொன்னம்பலத்திலெங்கள்நாயகனை
கைக்கவிருப்பிசேற்றே வந்திருக்கின்றேனெனவும்
முக்கண்ணனன்பர் முறுவல்பூத்திதுரைப்பார்
இன்பங்கருகின்ற கொலைதுகள்பொய்துட்டர்களை
என்றுசொல்நாள்குத்தமது தவிழ்த்திருக்குங்கடவுள்
மாப்கைவுலகதனில் வந்தேயவதரிக்க
தாய்வயிற்றைப்பிறிவக்க தானவனுமன்றிமெழில்
பிடகனுயிற்சொல்லிப் பொருந்தியதன்பின்மறைந்து
திடமாமரசமர கீழலிலேசென்றிருப்பான்
ஒக்கடவுளாகா வரகப்பணிசெரித்துந்
திங்களுடனேறணிந்துந் திருநீர்மிகபணிந்தும்
இலகுமழகண்டர் விலையாபவனிடத்தில்
பெலமேதுபேரோது பேசாயெனவுரைக்க
செய்புவாரர் தனைருவ் தேவனார்சொன்னனென்றாய்
ஒப்பிலாதின்னறிவு தோன்றிபொருநொடியில்
போமென்றுயின்னறிவு போப்பின்கெடுதிவரும்
மாமென்றுவுன்னா லழகேதெனக்கூறித்
தன்மருனக்கில்லையது சாற்றுகின்றநானுமில்லை
சன்மங்கைக்கொள்ளுமுங்கட் கர்த்தன்விதித்தபடி
இரண்டுபத்தொன்றாய் எழுந்தபுத்திராமலரும்
பரந்தவுலகத்தில்வந்து பற்பலவாயுற்பவித்து
தாய்வயிற்றைப்பிறிவந்த தானவனுமென்றுரைத்தாய்
ஆயிதனைக்கொன்றார் அருநரகில்வீழாமல்
சேவனுய்வந்தவிதவன் சொல்நீர்செப்புமென
நாவதனிலஞ்செழுத்தை நாட்டுந்திறமுடையோகன்
சொல்லவெருண்டுபுத்தன் சொல்லுவானெங்களுக்கு
நல்லசெய்வமில்லையென்ப நன்மோட்சமில்லையென்று
சொன்னவுன்றுடைய தெய்வமெதுகத்தமுள்
நன்னயஞ்சேருங்கடவுள் நற்றாளடைந்தவர்க்கு
மோட்சமெதுசொல்லென வசமடனெடுத்துரைக்க
குட்சாதிகுட்சமன்னன் துணைப்பதங்கொண்டின்பமுறு
வாதவூராய்யர் வழுத்துவார்வையமெலாம் [ம்

போதவளர்ந்த கல்லாலினிழற்பொருந்தி
வேதம்பணித்தவரம் தன்னைவிரித்துரைத்துந்
தீதகற்றும்பஞ்சாட் சரத்தைத்தெளிவுரவே
சொல்லியடியார் தொழுதிறைஞ்சிக்கண்களிப்ப
அல்லும்பகலும் அவனுடல்காண்பிவித்துச்
செய்யதிருமேனிச் சிறப்புறவெண்ணீறணிந்துந்
தையலொருபாகத் திருத்தியவன் தன்மைதனை
சொல்லவெழிதாவெருந் தோற்றமதியனை
வல்லவன்வார்செஞ்சடையில் வைத்திருப்பானேயாகில்
ஆதியெவளவதனந்த மெவளவதன்
நீதியெவளவெதன் நிலைமைதனையறிந்து
செப்புகற்கனவில் தாமென்னத்திங்குற்றபுத்தன்
எப்புவியுந்தானுகு யீசன்றடியாரைப்பார்த்து
கூறுவான்கல்லாலி னீழல்கொண்டிருந்தசிவன்
நீறுமதியும் நிறைந்தகங்கையும்புனைந்து
பஞ்சாட்சரஞ்செபித்த பாவனையாதென்றுமோ
கொஞ்சிமற்றதெய்வமதைக் கிட்டுதல்போச்சலமி
தப்பலவாபித்தனைப்போற் தானடிக்காட்டியும்பின்
ஒப்பிலாவாண்பெண் ணுருவெடுத்தவுங்கடவுள்
இருபிறப்பானென்றே யிகழ்ச்சிபெற்றவனுக்கு
பெருமையென்னவாண்மைஎன்ன பேசாயெனவுரைக்க
மாதவருஞ்சொல்வாரிம் மானிலத்தாற்கப்போகஞ்
சாதகமாய்க்காட்டுவன்போற் றையலொருபாகம்வைத்
எங்குமேதானு யிருப்போனடியவர்க்காய் [தாய்
அங்கந்தனைச்சுருக்கி யுன்னடியார்கண்டுதொழ
மானிடர்கள்போலே வருவன்வந்தாடல்செய்வன்
தேனினியவன்றன் செய்கைகளைக்கண்டுரைப்பார்
கண்கெட்டமூடா வெனக்கன்றிக்கண் ணுதலை
எண்ணுமறவா ரிதயத்தெழுந்ததுன்பந் [பார்
தன்னுல்வெண்டாமரையில் தங்குவனைப்பார்த்துரைப்
மன்னுலகில்மைந்தர் மடவாரார்வாக்கிருந்து
சத்தியமாய்ப்பேசுகின்ற எந்தாயேமனோன்மணியே
பத்தியுளவேதம் பகருவளேபாமுகளே
கூற்றன்றனையுதைத்த கோமான்புகழதனை

மாற்றிப்பழிப்புரைக்கும் மாபாவிப்புத்தர்கள்தன்
நாவிட்டெழுதினிய நாயகன்றாள்சேரெனவே
மேவித்திருவெண்டா மறையாளவ்வேதவர்தன்
சொற்படியேசென்றாள் துணிவகன்றுபுத்தர்களும்
கற்றவமுன்னில்லா தவர்போலநாக்குவரி
பேசாதாரானார்கள் பின்னீழதேசமுகில்
வேசாரடைந்தினிய வேதவரம்போதுசரன்
கண்டுதெரிசித்தெழுந் திக்காதகராம்புத்தர்கள்
பண்டுளபேச்சுப்போக்கிப் பண்ணினீரூமையர்தாய்
ஆகையால்வாய்பேசா தங்கியவென்புத்திரிதன்
மூகைநீக்கிவசன மொழியவின்றுசெய்தீரால்
அய்யாநானுந்தன் அடிமைக்கடிமையதாய்
தெய்வம்நீரென்றே தினந்தொழுவேனென்றுரைக்க
சீர்பொருந்துமாதவத்துச் செல்வனதற்கிசைந்து
கார்பொருந்துங்கூந்தலுடைக் கன்னிதனைமுன்னிறுத்தி
திருனோக்கால்நோக்கச் செழுமையுளகன்னியரும்
புத்தர்களைநீர்தாம் புகன்றவழக்கானவதைச்
சித்தங்கலங்காதென்முன் செப்புவீரென்றுரைக்க
அன்றுபுத்தர்சொன்ன அசத்தியவார்த்தைக்குப்பதில்
சென்றுகன்னிசொன்னத் திறம்பார்த்தருமறையோர்
பாதம்பணிந்தீர் பார்த்திபன்பஞ்சாட்சரத்தை
சாதகமாயோதித் தனிநீறுந்தான்தரித்து
அடிமைத்திறங்கொண் டமர்ந்தவரலாரறிந்து
கெடிகொண்டசோழனுடன் கிட்டிமூவாயிரரும்
வெள்ளியம்பலத்திலுறை வித்தகன்தன்பொற்றாளை
நள்ளியாமத்துமற வாதவெழில்நற்றவரைக்
கொண்டாடினார்புகழ்ந்தா ராகவுடன்கூட்டிவந்த
வண்டலம்பூந்தார்வேய்ந்த மாவீழதேசமன்னன்
உருத்திராட்சமாலை யணிந்துரியவெண்ணீறணிந்து

திருத்தமுளபஞ்சாட்சரம் செபித்தல்புத்தர்கண்டு
வாதவூரார்தம்மாஃ மலர்த்தாளைநிர்வணங்கி
வேதவரேயாங்கள்செய்த விக்கினமெலாம்பொறுத்து
ஊமைத்தன்மையைநீக்கிஎங்கட்குள்ளவஸ்திரம்போக்கி
ஆமையுருக்கொண்டோன்றனை யழுங்கியவிடையாய்க்
கொண்டுலகமெல்லாங் குறைவாதற்காத்தருளும்
அண்டர்பெருமான் அருளியபஞ்சாட்சரமே
மெய்யிதுமற்றெல்லாம் பொய்யென்னவிளங்கமுற
அப்பாவுன்றன்னா லறிந்தோமெனக்கூறி
எல்லவருமொன்றுயெழுந்தெதிரில்வந்துநின்று
பலவிதங்களாகப் பணிந்துகரங்கூப்பிநிற்க
வேதவரும்புத்தர்கள்தம் வீதியிற்றயைகூர்ந்து
நீதகன்றபுத்தர்கள்தன் சீவரவாடையெல்லாம்
வாங்கித்தீயிட்டார் அம்மரந்தனிருக்கொப்பான
நீங்கற்றுவர்சாயாசந் தன்னைச்சிவனடியார்
கைபாட்கொடுத்திதனைக் கட்டுமெனவேகதியில்
மெய்யாகச்சேர்க்கும் இனியதிருநீறணிந்து
சிவபதமேசேர்வீரென வாழ்த்திச்சிறுயரும்
புவனமதைப்புரக்கும் புண்ணியவான்சோழனுடன்
தில்லைமூவாயிரரும் சேர்ந்துவரவேயீழ
வல்லவருமற்றவரும் வந்துசபாநாயகரைக்
கண்டுதெரிசிக்கக் கடிநகரிலுள்ளவர்கள்
அண்டர்பெருமான் அடியார்தமைவணங்கி
சென்றார்பொன்னிநாடன் தென்னன்திருவிலங்கு
குன்றூர்புயத்திறன் கோலாகலமாக
தன்னுடனடைந்தானதன்பின்தவத்தோரும்
மன்னுதிருப்புலியூர் வந்தந்தரன்பதத்தைக்
கண்டுதொழுதின்பக் கடலாழ்ந்தினிதிருந்த
கொண்டல்நிகர்கண்டரன்பர் கூறும்படையரசன்

திருப்படையெழுச்சியச் சேர்பத்துந்தெளிவாய்
விருப்புறுந்தேயுலக யாத்திரைப்பத்தும்விரித்து
கேடல்திகைத்தல் தெளிதல்சிறுமைகொண்டு
வாடல்களித்தலில்லா பாபெரியவாழ்வடைந்தார்
எல்லவரும்போற்றைந் தெழுத்துமியல்புடைய
நல்லவெண்ணீறும்பொலிந்து நற்புவியெல்லாம்விளங்க
சிவஞானத்தைவிதிக்குந் திருவாசகமுரைப்பார்
பவசாகரங்கடந்த பாம்புபுலியும்பார்க்கக்
கனகச்சபையில்நடனங் காட்டுஞ்சபாபதிவாழ்
தன்முயருந்தில்லைத் தலமேசிவபதமாங்
கொண்டவருமங்கிருக்க குன்றதனையில்லாக
பண்டுசெய்தோனுதிசைவர் பார்க்கவொருவேதியனுய்
துய்யகரத்தில் துலங்கிடவெள்ளேடேந்தி
செய்யமலர்ப்பாதம் சிவந்திடவந்தங்குநின்று
அந்தமுளவேதியரைப் பார்த்தானந்தமாதவத்தோன்
சிந்தைமகிழ்வாக விருமென்றூர்சிறந்திருக்க
அய்யர்முகம்பார்த் தரியதிருவூரெதுநீர்
மெய்யாகயிங்குவந்த வேலையென்னவென்றுரைக்க
செப்புவார்வேதச் சிறங்கடந்தோனன்னருள்சேர்
ஒப்பில்மதுரா புரியாம்மிருப்பிடமாம்
என்றுரைக்கப்பின்னும் எடுத்துரைப்பாரெத்தலமும்
சென்றுதெரிசிப்போர்கள் செருங்கதியதனை
பாயும்பெருந்துறைவா ழீசனிருபொற்கமலச்
செய்யபதம்போற்றிபிரு தீவினையொன்றில்லாத
பேரின்பவாழ்வடைந்த பின்புகழுக்குன்றமெனுஞ்
சீர்பொருந்துமாதலத்தைச் சேவித்தெழுந்துடனே
வந்துசிதம்பரத்தில் வந்தபுத்தரைச்செயித்த
விந்தையும்பொன்னம்பலவன் மீதிலருந்தமிழால்

மண்ணுலகும்விண்ணுலகும் பாதாளமாமுலகும்
நன்றுமுத்ததின் னலமாமமுதமெனப்
பாடினீரென்றே பலர்கள்சொல்லக்கேழ்வியுற்று
நாடியவந்தகேட்டெழுத நண்ணிருளனைதினால்
வேதகுலவித்தனேயீர் வேண்டுமெனக்காயிறங்கி
போதனைவாயால் புகழ்வாதனைமுற்றும்
எழுதுகிறேனென்றே எடுத்தார்முகம்பார்த்து
பழுதகன்றருள்மகிழ்ந்து பாடுமினியதுள
திருவாசகத்தமிழைச் செப்பினார்செவ்வையதாய்
மருவார்ந்தகொன்றைமலர் வாய்ந்தோன்யாவருக்குந்
தேவன்கரத்தாலெழுதி முடிந்தின்னமுந்தன்
நாவதனாற்கோவையென்று நல்குவீரென்றுரைக்க
குற்றமிலாமனத்தோர் கோவைசொல்லக்கேட்டெழுதி
சித்தம்பலவரென்று ரீசர்த்தயவுடனே
கொண்டுகொணராக்க கோதிலாமாதவரும்
வண்டமிழைக்கேட்டெழுதும் மாபெரியோரைத்தேடி
பார்த்தென்னவாச்சரிய மென்றேபசுபதியாம்
மூர்த்திசெயலாமெனவே மூதறிவோருமறிந்து
என்னையடிமைகொண்ட வெந்தையேநாள்தோறும்
அன்னையெனக்காத்தருளு மாதியந்தமில்லானே
தேவாதிதேவனேயென் சிந்தைகுடிகொண்டவனே
சாவாமருந்தளிக்குந் தற்பரனேயென்றுருகிக்
கண்ணீருதிர்ப்பார் கதறியழுவார்விழுவார்
எண்ணிமனம்புண்ணா யிருந்திடுவாராகவிப்பால்
திருச்சபையில்மேவுஞ் சிதம்பரதேவன்கொணர்ந்த
அரும்பொருளாம்புத்தகத்தை யவிழ்த்தயன்மாலிந்திர
தேவர்களும்யோகியருஞ்சேர்ந்திருந்தமாசபையை[னும்
மூவர்களிலுஞ்சிறந்த மூர்த்திபார்த்தேதுசொல்வார்

என்னைமறவா தெழில்வா தவூரனவன்
சொன்னதிருப்பாடலிதைச்சொல்லுவோங்கேளுமென்
ஓதினார்கேட்டா ருவகையுற்றானந்தமொடு
பாதிமதிசூடும் பரனைத் துதித்தவர்கள்
அய்யாவுன்பாத மடைந்தார்பெருமையதைப்
பொய்நாவுடையவெங்க ளாற்புகழப்போவதுமோ
என்றயன்மாலிந்திரன்மற் றெல்லவருமேகூற
மின்றிகழ்பொன்னம்பலவன் மிக்கவருள்கூர்ந்தினிய
ஆணிவைத்துப்பொன்பார்த் தளவிடுதல்போலுமிந்த
சேணிலத்தி லுள்ளபொரு ளெல்லாந்தெளிந்தெடுத்து
குற்றமற்றகல்வியது கூறியதால்மேலாகக்
கற்றவர்க்குங்காணரிய கவிபுகழுமாணிக்க
வாசகன்மென்றொருபேர் வாய்ந்ததெனவும்பெழுதி
ஈசனார்பின்னு மெழுதலுற்றாரம்மானை
மாதவத்திலேயுயர்ந்த வாதவூரய்யனென்போன்
நீதகற்றுமானதிரு வாசகந்திருக்கோவை
பாடினன்பொன்னம்ப லவன்கையெழுத்திதென
நாடியெழுதி நலமுடன்கைக்காப்புமிட்டு
தன்மீதுருமையுள்ள தாசன்தவத்திறத்தை
மன்னுபுவியோரறிய வைத்திடுவோமென்றுவந்து
முன்னப்படுமுனிவருந் தேவருமேயிறைஞ்சும்
வன்னச்சபைவாயிற்படி யில்வைத்தார்புஸ்தகத்தை
அப்போதுபூசைசெய்ய வந்தவோரந்தணரும்
தப்பிலாப்புத்தகத்தை தான்கண்டதிசயமாய்
பார்த்துதில்லைமூவா யிரவருக்கும்பாங்காக
சாத்துவோமென்றெண்ணித் தப்பகன்றவேதியனும்
சென்றுரைக்கக்கேட்டு வந்ததில்லைமூவாயிரரும்
கன்றைத்தேடும்பசுப்போல் கால்விசையாய்வோடிவந்து

பொற்சபையில்வந்திவ்வியப் புஸ்தகத்தைக்கண்டவர்கள்
உற்றவர்கண்காண நடனக்கூத்தாடினவன்
சொல்லியசிவாகமமோ தூய்யதமிழ்நூலதுவோ
கல்விதனில்வல்லவர்கள் கண்டுணருமென்றுரைத்தார்
அப்போதுதில்லைமூவா யிரவரிலேயொருவர்
ஒப்பில்லாக்கல்விபதிற் றற்றவோரந்தணனும்
நன்மலர்கொண்டேத்திப்பந்த நாதன்வைத்தபுத்தகத்தை
மென்கரத்தாற்றீண்டி விமலனிருதாள்போற்றி
கட்டவிழ்த்தே ஞானக் கவியதனைப்புகழ
இஷ்டமுடன்கேட்போ ரிதயத்தெழுமகிழ்ச்சி
கொள்ளாது பல ழிதலென்னக்குருவேர்வை
தள்ளவிழிநீர்த் ததும்பக்கூத்தாடினவராயச்
செய்யபவந்தீர்க்குஞ் சிவரூபந்தாமெனவே
அய்யமார்தில்லை மூவாயிரவருங்கேட்டு
திருவாசகக்கோவைச் செப்பிக்கடையேட்டில்
கருமாற்றிமேல்விட்டைக் காட்டுசிவனைப்பாடும்
வாதவூராருரைக்கக் கேட்டுமாதொண்டருட
ரேதகற்றும்பொன்னம் பலவன்றிருக்கரத்தில்
ஒப்பமிதுவென்றெழுதி யுள்ளதன்மையைப்பார்த்து
அப்பணியுஞ்செஞ்சடையார் அன்பரிடஞ்சென்றிதனில்
எப்பொருளும்நன்றாய் யினிதுரைக்கக்கேட்பமினி
நட்புடனேதில்லை நகரத்தாரெல்லோரும்
வந்தடைந்துபேசுகின்ற வார்த்தைத்தொனிகேட்டு
பந்தமறயோகத் திருந்தவரும்பண்புடனே
கண்டுவிழித்தாருகக் கரங்குவித்திவர்பணிந்து
பண்ணவர்க்குமேலானப்பாக்கியத்தைப்பார்த்துரைப்பார்
விண்ணினுக்குமண்ணினுக்கும் மெழில்பாதலத்தினுக்கு
கண்ணுதலேமூர்த்தியென கண்டுரைப்பார்லமலோர் [ம்
ஆணதாலெங்களுக்கு அவ்வாறுகயிங்குவந்து

தேளலங்கலேவெய்ந்த தேவர்யிதின்பொருளைச்
சொல்லவெனவேத்தித் துதித்தார்முகம்நோக்கி
நல்லதவத்தய்யர் நவில்வார்பொன்னம்பலத்தில்
சென்றுரைப்போமென்ன வெழுந்தேகினாங்குநின்று
நன்றுதருந்தில்லையில்வாழ் அந்தணர்கள்நாடிவர
கஞ்சமலரோனும்நறுங் காயாம்புமேனியனும்
மஞ்சுறுவானுடர்களும் மகாரிஷிகளுடனே
திருத்தவத்தாராகுந் திருவாதவூரார்சிவன்
மருக்கமழும்பொற்று ளில்லாகவிறைவாழ்வதனைப்
பார்த்திருக்ககண்பெற்றப் பயனடைந்தோமென்றவர்க
ஆர்த்துலுறவேமகிழ்ந் தானந்தக்கூத்தாடிவர [ள்
போய்க்கனகசபைப் புக்கிச்சகமாயை
மாயமருந்தழித்த மானிலவள்ளிபங்கன்
நேர்நின்றிறைஞ்சி மனம்நெக்குநெக்கதாயுருகி
ஆர்கொன்றையும்புனைந்த வையனேமாலயனுங்
கண்டறியாக்கங்கா தராநீலகண்டத்தைக்
கொண்டவாகூற்றன் றனையுதைத்தவர்கொடிய
ஆலமமுதாகவுண்ட ஆதியந்தமில்லாதாய்
பாலன்றுயரதனைப் பார்த்திரங்குவாயெனவே
தன்னுள்ளியம்பித்தவத்தோர் பின்னேதுரைப்பார்
நன்னயமாயென்றனைநீர் நாடியேகேட்டபொருள்
இதுதான்காண்பாருமென யீசன்றனைக்காட்டி
மீதுக்குடியோனரிய மென்றுனடிக்கமலஞ்
சார்ந்தார்பின்றில்லைமூவா யிரவருஞ்சார்பாய்
சேர்ந்தென்னவாச்சரிய மென்றேசிவனடியில்

முச்சுடருமொன்றாய் முயன்றெழுந்தவாரேபோல்
அச்சமிலார்தம்பொருட் டருளொளியுண்டாகினதில்
தெரியாப்பொருளியம்பச் சென்றுவந்தயோகியரும்
எரிமூழ்கித்தோனு திறைவன்றுள்சேரவிவர்
செய்தபூசாபலமோ சிவனார்தயையிதுவோ
அய்யமிலாவிப்பே றடைந்தாரரென்றுரைத்து
தங்காமகிட்சியுடன் சங்கரனைத்தான்வணங்கி
பங்காயவரவர்தம் பண்புளவில்லிற்புகுந்து
அய்யன்றிருவிளை யாடல்பார்த்தகமகிழ்ந்து
மைவண்ணனுமயனும் மாதவருமுளமகிழ
வானுடவன்மகிழ வானவர்பூமாரிசிந்த
ஆனமகிட்சிகொண்ட அரம்பையர்களாடிவா
நந்திமத்தளம்போட நாரதரும்பண்பாட
துந்துபிகளெந்தும் துருசாய்முழங்கியதே
தெய்வீகநீறும் திருவுத்திராட்சமணியுஞ்
சைவசமயர் தழைத்துத்தரணிதனில்
இட்டதீபம்போல யிருநிலத்திலுள்ளவரை
தொட்டபவவிருளைத் தோனுமலேதொலைத்து
நற்கதியிற்சேற்கும்முக்கண் ணுதனருளாலே
பொற்புடையமன்றிற் பொருந்திக்கலந்தினிய
பேரடைந்தார்தன்பதத்தைப் பேணியன்புதந்தவரும்
ஆரணிந்தோனன்பர் அருள்சேருமித்தமிழை
பாடும்படிக்கினியப் பரிசுமிகவேகொடுத்து
நீடும்புகழுடநன் னெறியுங்கொண்டிவ்வுலக





உம்பரெனவேவாழும் உத்தமனுஞ்சுப்பிரமணியத்
தம்பிரான்சாமிபுகழ் தழைத்தோங்கிடவாழி
நீந்தாப்பிறவிக்கடல் நீந்திபரசனடி
சார்ந்ததிருவாத வூரார்தந்திருக்கதையை
பாடினோர்கேட்டோர் பயன்பெறுவாரிக்கதையை
நாடிவைத்துப்பூசைசெய்தோர் நன்னாளும்வாழியதே
முற்றும்பெரியாளுடை யார்துணைச்செய்யவேணும்
முற்றும்பெற்றுக்கொண்டது மீனாட்சிதுணையாமே.

ஆவுடையார் விளக்கமென்னும்

மாணிக்கவாசகர் அம்மானை முற்றிற்று.



## அறிவிப்பு.

அ

# ரிஜிஸ்டர் அறிவிப்பு.

---

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில்:— 1867-ம் வருஷத்திய 25-வது ஆக்ட்டின் 20-வது பிரிவின் 6-வது உட்பிரிவின்படி கனம்பொருந்திய கவரன்மெண்டார் அவர்கள் சட்டத்திற்கிணங்க, இந்நூலை பிறர் அச்சிடாதபடி காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறது.

இந்நூலுக் குடையவனாகிய என் அநுமதியின்றி இந்நூலையாவது இந்நூலிலுள்ள பாகங்கள் எதையாவது பிறர் அச்சிற் பதிப்பிக்கலாகாது. இதைக் கவனியாது அச்சிடத் துணிவரேல், அதனாலுண்டாகும் நஷ்டத்திற்கு சட்டப்பிரகாரம் நடத்தப்படுமென்று அறிவிக்கின்றனன்.

இங்ஙனம்,

பு. நாராயணசாமிப் பிள்ளை,

நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலை,

16, சரவணப்பெருமாள்முதலிவீதி, புரசை, சென்னை.

